



உ

சிவமயம்.

# குருமுறை.

விருத்தாசலம் - குமாரதேவர்

ஆதீனபரம்பரையைச்சேர்ந்த

வேதசிரேணி என்னும்

வேளச்சேரிசுவாமிகளாகிய

சிவசிதம்பரதேசிகரது

திருவடித்தொண்டர்

சிவசுப்பிரமணியதேசிகர்

இயற்றியது.

இஃது

புரசை

அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாராலும்

பிறையாறு - அருணசலசுவாமிகள்

மாணக்கர்களி லொருவராகிய

சச்சிதாநந்தப்பிள்ளையவர்களாலும்

பரிசோதித்து

ஆலந்தூர்

ரங்கோன் - குழந்தைவேலு முதலியாரவர்களும்

புரசையிலிருக்கும்

மஞ்சங்காரணி தாணுனந்தபிள்ளையவர்களும்

கேட்டுக்கொண்டபடி

பூ - ராஜரத்ந முதலியாரவர்களால்

சென்னபட்டணம்

ஊ. புஷ்பரதச்செட்டியாரவர்களது

கலாரத்நாகரமென்னும்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

பிரபவ ௵ - ஆனி ௴

உ

சிவமயம்

இ ஃ து

வித்வான் - காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கர்

புரசை அஷ்டாவதானம்

# சபாபதிமுதலியாரால்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

நேரிசை ஆசிரியப்பா

உரவுநீருடுத்த நிலவரைப்பரப்பில்
விரவுபல்லுயிரும் விழைந்துளம்வேட்டவை
பெறீஇனனியுய்குவான் பிறங்குந்திரைக்கையால்
நறுமலர்நித்தில நன்மணிவரையில
வெடுத்துமுத்தாநதி யிறைஞ்சுபொற்சிமய
விருத்தாசலப்பெயர் வியன்பதியகலாப்
பெருந்ததபோநிதி பெருகுந்திருவருட்
பான்மைநயந்தெவர் பற்றிலார்பற்றுறு
மேன்மையோரவர்தமை வியந்துகுருமொழி
பகருந்தயாநெறிப் பரிசிலிறைமை
தகவருமாட்சித் தத்துவஞான
தேசிககுமார தேவர்பரம்பரை
வாசசரோருக மலரொஞ்ஞான்றும்
கூம்புதலின்றிக் குலாய்மலர்ந்தோங்க
வோம்பும்பரிதி யுணங்கரும்விழுத்தகை
செறிந்துநற்றருமந் திரனுறப்பயின்று
பிறந்தபயன்றமிற் பெறும்பெருநல்லோர்
மதியைவிட்டகலா வண்ணங்கிளர்ந்தெழில்
பதிவுறுபசியமேற் பரப்பெனப்புயறவழ்
பாளைக்கமுகுயர் பைங்காற்பொறுத்த
வேளச்சேரியெனும் வேதசிரோணி
திகழ்பெரியோன்சிவ சிதம்பரதேசிகன்
அகலருநிழலென அடிமலர்விடாஅச்
சாதகக்காட்சித் தன்னிகரின்மையோன்
மாதவர்க்கிருக்கையாய் மாநிலவளாப்பி
னீளிடைப்பயக்கு நெடுநீர்வையைத்
தண்டுறைகிளர்ந்த தழைதருமணிமுகின்
மண்டிலமளப்பான் வளர்வுறுமணிமதில்
தாராகணத்தினைத் தாயெண்ணியாங்குப்
போராதுநிவந்த பெருகொளிமாடம்

மகவான்முதலிய வானவர்மாநகர்
புகலாந்தமதொரு புரிநிகராங்கொல்
எனத்தாங்காணிய வெழுந்தேமாப்பத்
தனத்திலணியிற் சார்புறுங்கேள்வியிற்
றேவகுலங்களிற் சீர்மையிற்சிறப்பிற்
பாவுறும்வண்மையிற் பன்மாண்புகழ்மையிற்
றனக்கிணைசொலிலொரு தானேநிலைபெறூஉ
மெனக்கதித்தனைத்தையு மீன்றருளம்மையங்
கயற்கண்வல்லியார் காதல்பிரிவிலா
வியற்கையருளி னெட்டெட்டுத்திரு
விளையாடற்செயல் விளைத்தவான்கருணை
முளைநீணிலமதாய் முன்னுசொக்கேசர்
உயிர்க்குணர்வெனூஉ வுறைதிருமதுரை
நயத்தமாநகரி னண்ணுமெய்ம்மையோன்
சிவசுப்ரமண்ணிய தேசிகன்றரூஉ
தவபலன்போன்மெனத் தரணியோர்புகலச்
சுபோதசிகாமணி சொல்லுறுங்கழனி
வாசத்திருவரு ணாசலதேசிக
ரத்நப்பிள்ளைத்தமிழ் நலம்புனைதிருவநிள்
சாயக்கோட்டை யெனும்அழகாபுரி
மேயவுமையாநந்தப் பிள்ளைத்தமிழ்
மரகதமுத்துமா ணிக்கத்திருப்புகழ்
விராவுதென்றிசைக்கண் விளங்கக்கிளர்ந்த
இராயபுரம்பதிற் றுப்பத்தந்தாதி
வேதசிரோணி விளங்கவருமுயர்
சேதனங்கூர்சிவ சிதம்பரதேசிகன்
சரணப்பதிகஞ் சதானந்தக்களிப்
பரணமதாகு மன்னைப்பத்தும்
ஆமிவையியற்றி யனைத்துஞ்சேர்ந்த
நாமங்குருமுறை யெனநன்குரைத்துச்
சுருதிகுருசு வானுபவசுக
விருதுமிக்கோர்க்கு வியன்சேரிலச்சினை
யின்னணமாமென் றெவர்க்குந்
தன்னெஞ்சால்பு தழைவித்தனனே.

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.

---

வித்வான் - காஞ்சிபுரம்

# சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றிய

## சாத்துக்கவி.

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தருவளருமதுறைநகர்ச் சிவசுப்பிரமணியதேசிகதயாளன்
இருவினைநேர் தரமுதலாமலவிருளைநீக்குமியல் புடையதென்னு
மொருபெருங்காரணமெவர்க்குந் தோற்றுவான்றனதுள்ளத் தோர்ந்திந்நூலைக்
குருமுறையென்றொருநாமந்தந்தியற்றிப்பெரும்புகழ்கைக் கொண்டான்மன்றே.

பிறையாறு - அருணாசல சுவாமிகள்

மாணாக்கரிலொருவராகிய

# சச்சிதாநந்தப்பிள்ளையவர்களால்

இயற்றப்பட்ட

## அகவல்.

மலர்தலையுலகின் மாட்சிமைதங்கிப்
பலர்புகழேற்றுப் படிறகன்றிலங்குங்
கருத்திற்கேற்ற கழனிவாசல்
திருப்பதியதனிற் றிருமறையொருபால்
ஆகமகலையா றங்கமுமொருபால்
போகங்கழன்ற புண்ணியரொருபால்
தற்கமதொருபாற் றவசினரொருபால்
கற்பான்றன்னைக் கற்பவரொருபால்
உலகமுந்தாமு முணர்வெளியாமென்
றலகிலாநந்தத் தழுந்தினரொருபால்
ஒன்றேயொழிய வுயிர்பரமாதி
யின்றெனத்தேர்ந்தி னிருப்பவரொருபால்
திணைபாவிடங்கள் சித்தெனக்கண்டங்
கணையாதறிவா யமைபவரொருபால்
இருக்கநடுவ ணிலங்கியசற்குரு
பெருக்கமுமிழிவும் பேணுவகத்தன்
மாவாக்கியத்தை மருளறத்தேர்ந்தோன்
தாவாதகத்தைத் தாணுக்கியவன்
அருணாசலப்பெய ராசிலாதவன்மேல்
அருளேணுக்கடைந்திங் கறைந்தனனிந்நூல்
ஒப்பிலா னடியரிலுயர்ந்த
சுப்பிரமணியனுந் துலங்குதேசிகனே.

சாத்துக்கவி

முற்றிற்று.

---



சிவமயம்.

குருவே துணை.

சிவசின்மயானந்தசொரூபாயநம:

# குருமுறை.

## சுபோதசிகாமணி.

பைக்குலாமுடிப்பாந்தள்விழியெனப் ... ... ... ...*
பொய்க்குலாமுயி ரும்பரபோதமு ... ... ... ...*
மெய்க்கவத்து விதமெனக்காட்டிடுங் ... ... ... ...*
கைக்களிற்றைக் கருத்துளிருத்துவாம் ... ... ... (க)

சத்யஞானவனந்த சதானந்த ... ... ... ...*
நித்யபூரண நின்மலநிட்கள ... ... ... ...*
வத்வீதிய வகண்டசுதாரச ... ... ... ...*
வத்துவைநினைத் தேத்திவணங்குவாம் ... ... ... (உ)

ஞாதுராதிநசித்திடின் மெய்ப்பொரு... ... ...*
டீதிலொன்றெனச் சின்முத்திரைக்கையா ... ... ...*
லோதுசீரருணசல வொண்குரு ... ... ...*
நாதனுண்மலர்ப் பாதநவிற்றுவாம் ... ... ... (ங)

மறைவலான்வித்தை யாரண்யமாதவ ... ... ... ...*
னறையுநாடக தீபிகையர்த்தமே ... ... ... ...*
செறிசுபோத சிகாமணியென்னவே ... ... ... ...*
சிறியசெந்தமிழ்ச் செய்யுளிற்கூறுவாம்... ... ... (ச)

கத்தன்முக்கரணங் கருமங்களோர் ... ... ... ...*
சித்தெனுங்குரு வார்த்தைதிறம்பிய ... ... ... ...*
மத்தனென்பனொன் றேமணிமாணிக்க ... ... ... ...*
மொத்தமுத்தர்க் கடக்கமுனாத்திலேன்... ... .. (ரு)

பாயிரமுற்றும்.

## சாத்திராரம்பம்.

வேறு.

நீர்க்கோலமன்னசென்ம நிலையெனத்திரித்துக்காட்டுங் ... ...*
கார்க்கோலவஞ்ஞானத்தைக் கருவறுத்திடுவான்ஞானப் ... ...*
போர்க்கோலமாகிவந்த போதகாசிரியனூர்தஞ் ... ... ...*
சீர்க்கோலங்கண்டுவந்தோர் சிட்டனும்வணங்கினனே ... ... (௧)

கமலசெஞ்சரணந்தாழ்ந்து கைகுவித் தெழுந்துநின்று ... ...*
வமலபூரணசொரூப மிருந்தவாவவணிருப்ப ... ... ...*
விமலசிர்க்கருணைபூத்த மேனிதீவகம்போற்கொண்டு ... ... ...*
நிமலசற்குருவாய்வந்த நேரிலாய்காவென்றேத்தி ... ... (௨)

கல்விசாலறிவுகொண்டு கருதருமறையினீற்றுச் ... ... ...*
செல்வமாம்பொருள்கடேர்ந்துவிரிவினிற்றெளிதலில்லா... ...*
வல்வினையேனுஞான வழியொளியுணர்வானுன்ம ... ... ...*
பல்விதவிலக்கணங்கள் சுருக்கிநீபகர்தியென்றான் ... ... (௩)

வஞ்சமிலன்பனுக்கோர் மணிமுடிவேய்ந்தாலென்னக் ... ...*
கஞ்சநற்கழல்கள்சூட்டிக் கருணையங்கடைக்கணித்துச் ... ...*
சஞ்சலவடிவமாயா சத்திக்காதாரமாகு ... ... ...*
மஞ்சுகபோதந்தானே யாத்துமசொரூபமென்றார் ... ... (௪)

போற்றருஞானமாமெய்ப் பொருள்வள்ளானிருவிகார ... ...*
வாத்துமதத்துவத்திற் காயதிச்சிருட்டியெத்தாற் ... ... ...*
சாற்றுதியென்னிற்பொய்யாந் தன்னிருமாயோபாதி ... ... ...*
யாற்றருமகிலமாய சிருட்டிகளனைத்துமாதோ ... ... (௫)

கருதியமாயக்கங்குல் கவளமாவிழுங்குஞான ... ... ...*
விரிகதிரவனேநீல வேலைசூழ்சகமியாதென்னிற்... ... ...*
புரிதருமத்தியாசப் பாம்புமத்தாம்பேயாம்போற் ... ... ...*
றிரள்படுவுலகுமாத்ம சித்தன்றிவேறின்றன்றே ... ... (௬)

மூவர்கள்பரவுஞான மூர்த்தியேசீவனென்பான் ... ... ...*
யாவனேயெனினுபாதி யவித்தையிற்பதிவிம்பித்து ... ... ...*
மேவுடன்றெறுநகர்க்கே வேந்தனிற்பிரவேசித்து ... ... ...*
மூவிதவிவகாரஞ்செய் முதிர்சிதாபாசனுமால் ... ... (௭)

மாயைக்கோர்வைரியாக வந்ததேசிகசஞ்சார ... ... ...*
மேயதோர்பந்தமாவ தியாதெனவணங்கிக்கேட்கிற் ... ... ...*
சாயையாஞ்சித்தாபாசத் தோற்றமாந்தொய்தந்தானே ... ...*
யாயதுநீவினுய வந்தமில்பந்தமாதோ ... ... ... ... (௮)

இருவினையரம்பைக்காட்டை முறித்தெறியிபமேயந்தக் ... ... ...*
கருவினையுதவுபாசக் கட்டறுமுத்தியாதிங் ... ... ... ...*
குளையெனில்விசாரத்தாலே மாயையுமொழிந்தபின்ன... ... ...*
ரருமையாச்சித்தியாகு மத்வயமாகுமன்றே ... ... ... (௯)

வல்லிருண்மலவேழத்தைக் குமைக்குமாவரசேமாயா ... ... ...*
வெல்லைதீர்முத்தியெய்துஞ் சாதனம்யாதோதென்னிற் ... .. ...*
றெல்லைநான்மறைகளீற்றின் பொருள்விசாரத்தாற்றேன்றி ... ...*
நல்லவாறெழுகுமுண்மை ஞானமென்றறிதிமைந்தா... ... (௰)

மாயவெஞ்சியந்தன்னை மாய்த்தடுசரபமன்னுந் ... ... ...*
தூயவேதாந்தஞான விசாரமுந்தோன்றலெத்தா... ... ... *
லேயெனிலளப்பிலாம லெழுபவந்தோறுமான்ம ... ... ...*
நாயகர்க்கியற்றுபூசா பலத்தினுலென்பர்நல்லோர் ... ... (௰௧)

மீனெனவிழியாலென்னைத் தானெனவிழிக்குமெந்தாய் ... ...*
ஞானசற்குருவினேவ னண்ணிநல்விசாரஞ்செய்யு ... ... *
மானவனியாரோயென்னி லவித்தைமுன்னுடம்பீருக ... ... ...*
யானெனவபிமானித்து நின்றசைதன்யமென்பார் ... ...(௰௨)

தண்ணிலாப்புறங்காண்சீத வாக்கினுற்றவனமூன்று ... ... ...*
முண்ணிலாதசற்றுஞான வுத்தமகுருவேபோதக்... ... ... *
கண்ணிலான்றனக்குஞானக் கண்ணுறுமாறுதீக்கைப்... ... ...*
பண்ணுவான்குருவாயாரோ யெனிற்பரம்பரனேயாமால் ... ... (௰௩)

கைத்தலமணியினென்னைக் கணத்தினிற்காட்டுமெந்தா ... ... ...*
யத்தனுமியாதுசெய்யி னளித்திடுஞானமென்னி... ... ... *
னித்தியகருமம்யாக நீடவம்விரதம்யோகம் ... ... ... ...*
பத்தியும்பலன்வேண்டாது பண்ணிடிற்றருவனம்மா... ... (௰௪)

சருதியவனைத்துநல்குங் கற்பகமனையவெந்தாய்... ... ... *
சுருதிசொல்லீசனென்பா னியாரவன்சொற்றியென்னிற் ... ...*
றெருளுறுசத்வோபாதி யாற்றிரிமூர்த்தியாகி ... ... ... *
மருவுசைதன்யந்தானே யீசனென்றறிதிமைந்தா ... ... (௰௫)

அருள்பொழிமேகமன்ன வாரியகுருவேயொன்றுக் ... ... *
கிருவகைத்தாரதம்ய மியாதினுலாயதென்னின் ... ... ... ...*
மருவியவவித்தைமாயா வுபாதியால்வந்ததன்றி... ... ... *
யிருமையுஞ்சைதன்யத்தி லோர்ந்திடினில்லைமைந்தா... ... (௰௬)

அருமறைப்புருடனுக்கோ ரணிசிகாமணியதாக ... ... ...*
மருவியகுருவேயிந்த வத்துவுமாயைதன்னுல் ... ... ... *
விரிதருசிருட்டிசெய்யும் விதமெவ்வாறெனவினுவத் ... ... ...*
திருவுளங்கருணைபூத்துச் செப்புதன்மேயினுறே ... ... (௰௭)

முக்குணவடிவாமூலப் பகுதியின்முதன்மையான ... ... ...*
வக்குணந்தன்னிலீசன் றன்னையுமதற்கடுத்த ... ... ... *
விக்குணந்தன்னிற்சீவத் திரளையுமீறதான ... ... ... ...*
மைக்குணந்தனின்மறுதி யுலகமுமமணந்ததன்றே ... ... (௰௮)

துங்கநூல்விசாரத்தியாற் றௌன்மலக்களிம்பகற்றி ... ... ...*
யங்கமாருயிராஞ்செம்பை யரும்பொனுஞ்சிவமேயாக்கு ... ... *
மங்கணுசிருட்டியாஞ்சா தனபரம்பரையாதென்னி ... ... ...*
லிங்கியானென்னதென்னும் விருத்தியேயென்பர்மேலோர் ... (௰௯)

இருவினைத்திரையாற்சென்ம வெழுகடல்கடத்திமோட்சக் ... ...*
கரையிலுய்த்தருளுஞானக் கப்பலேசிருட்டியெல்லா ... ... *
முரியவெத்தனைவகுப்பி லொடுங்கினவெனின்யானீதென் ... ...*
றுரைவிருத்தியிற்கத்தாவும் பலனுமாயொடுங்கிற்றன்றே ... ... (௨௰)

செகவிருளிரிக்கும்வட்டத் தினகரன்றனக்குமுள்ளா... ... ...*
ரகவிருளிரிக்குஞ்சோதி யாகியகுருவேமுன்சொன் ... ... *
மிகுபகுப்பெல்லாந்தோற்று விப்பதுயாதோதென்னிற்... ... ...*
சுகபரஞ்சோதியாய சுத்தவான்மாவேயாமால்... ... ... (௨௧)

வானெனும்பூதந்தன்னை வாய்க்கொருகவளமாக்கொண் ... ...*
ஞானவாகாயபூத நாதநானெனும்விருத்தி ... ... ... *
யூனுளேகத்தனுகு மொருவனைக்கற்பிப்பானே ... ... ...*
ஞானவவ்விருத்தியேகாக் கிரகமாதலினுலாமால்... ... ... (௨௨)

வாக்கியவமுதான்ஞான மகவினைவளர்க்குமன்னுய் ... ... ...*
வீக்கிதம்விருத்திபைந்து விடயத்தைக்கற்பிப்பானே ... ... *
ஞேக்குமிந்தியவழித்தாய் நுழைந்தைந்தாக்கிரகமாகத் ... ...*
தாக்கியேபிரிந்தவாற்ற லங்ஙனஞ்சமைத்ததன்றே... ... (௨௩)

சாற்றுமுக்குற்றமாமுத் தானவாணவக்களிற்றை ... ... ...*
யாற்றின்மெய்ப்போதமுத்தி ராங்குசத்தடக்கவல்லா ... ... *
பெற்றமார்கத்தாவேகம் விருத்தியைவிதமாமீது ... ... ...*
மூற்றமின்மித்தையென்னி லளவையொன்றுரைத்தல்வேண்டும். (௨௪)

நாடகசாலைதீப நரபதிபாதஞ்செய்யு ... ... ... ... *
மாடகத்தளிர்க்கைநல்லா டாளமத்தளங்களார்ப்பார் ... ...*
பாடகப்பரிசனங்க டமைப்பகர்சமமாக்காட்டி ... ... ... *
மாடவரிலாதபோதும் வயங்குறுந்தானேயென்ன ... ... (௨௫)

கத்தனுஞ்சீவனந்தக் கரணமிந்தியம்புலன்க... ... ... ... *
ளொத்துளபோதுமில்லா தொழிந்துளபோதுங்கண்டு ... ... ...*
சத்தெனவிருக்குஞ்சாட்சி தானெனுஞ்சுவானுபூதிப்... ... ... *
புத்தியேயளவையென்னப் புகன்றனர்போதமூர்த்தி ... ... (௨௬)

சந்தேகமென்னுமேக சாலங்கணூலாய்ச்சிந்த ... ... ... *
வுந்தேகமாம்ப்ரசண்ட மாருதமொப்பாயீங்கே ... ... ...*
யெந்தேகவாடரங்கத் திஃதின்னதின்ன்தென்ன ... ... *
முந்தோதுமுபமானத்தை மொழிந்தருள்புரிதியென்னில்... ... (௨௭)

கத்தனுஞ்சிவன்றனே நரேந்திரன்சரணமாய... ... ... *
புத்தியேபாதஞ்செய்யும் புணர்முலைப்பொறிகளாய ... ... ...*
பத்துமத்தளமுன்னோர்ப்பார் பரிசனம்புலன்களோங்கு ... ... *
சத்தொடுசித்தானந்த சாட்சியேதீபமாமால் ... ... (௨௮)

கற்புரைசிவன்றன்னைக் கரையில்வேதாந்தமென்னுஞ் ... ... *
சிற்பநூற்றழுவிக்கொண்டு தெய்வதவுருவமாக்கும்... ... ...*
தற்பராசிரியவோயாச் சலனதீபஞ்சலித்த... ... ...
லற்பமுமிலாதசாட்சிக் கடாதுவமிப்பதென்னில் ... ... (௨௯)

அசைவறவரங்கினுப்ப னாட்டரும்பகல்செய்வத்தி... ... *
திசையுறுபொருள்களெல்லாந் தெரிதரவிளக்குமாபோ ... ...*
லசலபூரணவகண்ட வான்மசைதன்யந்தானு ... ... *
மிசையுமுட்புறம்புந்தோற்று விக்குமென்றறிதிமைந்தா ... ... (௩௰)

ஆரணப்பொருளைக்கொள்ளை யாகவேகொடுக்குஞான ... ... *
காரணகுருவேயுள்ளும் புறம்பெனக்கழறலியாது... ... ...*
தாரணமாகவென்னிற் றனுவினைக்குறித்தேயன்றிப் ... ... *
பூரணமாகுமான்ம போதமாசரித்தன்றன்றே ... ... (௩௧)

தேகமேமயமாய்நிற்குஞ் சீவபோதத்தைக்கொல்வான் ... ...*
யோகபீடத்துவாழ்வோ யுள்ளினிலுள்ளான்யாவன் ... ... *
வாகியத்துளதியாவை வரையெனில்வாகியத்திற் ... ...*
போகமாம்புலனுமுள்ளிற் புருடனுமுள்ளதன்றே ... (௩௨)

அந்தரவுடனின்றுடு மகங்கரப்பேயையோட்டு ... ... *
மந்திரம்வல்லாயுள்ளும் வாகியந்தனிலுந்தானே ... ...*
தந்திரமாகவோடிச் சஞ்சரித்திடல்யாதென்னி ... ... *
லிந்திரசாலங்காட்டும் புந்தியேயென்பர்முன்னோர்... ... (௩௩)

ஒன்பதுவங்கனுண்டா முடற்பிளவொழித்துக்காக்கைத் ... *
தன்பரமாகவந்த தன்மவாகடநூல்வல்லா ... ... ...*
யன்பொடுபுறத்துமுள்ளு மசைந்திடாப்பொருள்யாதென்னிற் ... *
றன்பரந்தானுஞ்சாட்சி சைதன்யமாகுமைந்தா ... (௩௪)

தீதுநன்றீதென்னத் திகழ்த்துகண்மணியேதன்னிற் ... ... *
சாதமாம்புத்திதானே சஞ்சரித்திடலென்னுது ... ... ...*
வேதமாப்போனேன்வந்தே னியானெனற்கேதேதென்னச் ... *
சீதவாய்க்குமுதம்பூத்துத் தேன்மொழிபிலிற்றலுற்றுர் ... (௩௫)

பல்கணிவழியாயுள்ளே பாய்ந்துவீழ்வெயிலின்மீது ... ... *
சொல்கையின்சலனமேற்றிச் சொல்லல்போன்மனமுமைவாய்ச் ...*
செல்கையாஞ்சலனந்தன்னை விளக்குறுஞ்சித்திலேற்றிச் ... *
சொல்கையேயன்றிப்போதந் துளக்கமில்பொருளாமன்றே ... (௩௬)

எங்கிருப்பினுமங்கங்கே யெய்திவந்துதவுநல்ல ... ... *
துங்கமாதவப்பேறன்னுய் சொற்றதத்துவங்களுள்ளீ ... ...*
திங்குளதீதிங்குள்ள தெனத்தெரிவித்தாற்போலச் ... ... *
சங்கமில்சாட்சியுள்ள தானமுந்தெரித்தியென்னில்... ... (௩௭)

அற்புருவாகியாசா னருள்வழிபாடுசெய்து ... ... ...*
தற்பதவாழ்வுவேண்டுஞ் சற்குணமகனேகேட்டி ... ... ...*
கற்பனைபுரியுமந்தக் கரணமிந்தியம்புலன்க ... ... ...*
ளற்பமுமிலாவிடத்தி லறிகநீவல்லைமன்னோ ... ... (௱அ)

நினைத்தொறுமிறும்பூதெய்த நேருநிட்சேபமன்ன ... ...*
யனுக்கிரகித்தவண்ண மறுந்திடுமௌவிலாங்கே ... ... ...*
யெனக்கொருதேகமில்லா திருத்தலானிவிர்தாமே ... ...*
யினைத்தெனக்காட்டல்வேண்டு மென்றெதிர்வணங்கிக்கேட்கில்... (௱௧)

பூமிசையுள்ளான்றன்னைப் புனலுளானென்றல்போலக் ... ...*
காமருபுத்திமுன்னுங் கரணமதொழிந்தபோதி ... ... ...*
லேமுறக்காணொணாத வியல்பினாலொருதேகத்தைக் ... ...*
காமுறப்பற்றிநிற்ப தன்றினுங்காக்குதுங்கேள் ... (௨௰)

சர்ப்பமாங்கற்பனைக்குத் தாம்பதிட்டானமாம்போற் ... ...*
புற்புதந்திரைநுரைக்குப் பொருகடன்மூலமாம்போற் ... ...*
கற்பனையுலகுக்கெல்லாங் காரணமாதலாலே ... ... ...*
பொற்புறுமகண்டாகார போதமென்றறிதிமைந்தா ... (௨௧)

பிழைத்தவையெலாம்பொறுத்துப் பேரருள்சுரக்குமெந்தாய் ...*
தழைத்தகற்பனைகளெல்லாஞ் சமைத்திடவலதேதென்னில் ... ...*
விழித்திடுநனுக்கனுவில் வெளியுளாம் பிரபஞ்சத்தை ... ...*
யிழைத்துடனடிக்கவல்ல தியம்பியபுத்தியாமே ... ... (௨௨)

மடலவிழ்கமலமென்ன வார்கடன்முகட்டிற்றோன்றும் ... ...*
வடவைபோலெனதுசென்ம வாரியையொழிக்கவல்லாய் ... ...*
நடுவுறுசாட்சியாய நாயகன்யாரோயென்னி ... ... ...*
லடையவுமறிவாய்நின்றே யறிதருபொருளாமன்றே ... (௨௩)

உயிர்க்கிதம்புரிதலானு மோங்கிருளவித்தைதன்னை ... ...*
யயர்ப்பறவெரித்தலானு மமிர்தமும்விடமுங்கூடி ... ...*
நயக்கவோருருவாய்த்தென்ன நண்ணியகுருவேயானுந் ... ...*
தியக்கறுசாட்சிதன்னைத் தெரிவதெவ்வண்ணமென்னில் ... (௨௪)

கண்ணெதிரிட்டுத்தன்னைக் காணுருவாறுநீயு ... ... ...*
மெண்ணியசாட்சிதன்னை யெதிரிட்டுக்காணொணாது ... ...*
நுண்ணியவுண்மைஞான நோக்கினாற்றனைமிஞ்சும் ... ...*
வண்ணமாம்பொருளாக்கண்டு மௌனமாயிருத்திமைந்தா ... (௨௫)

கணிதமிலுலகையொன்றாக் காட்டிடும்வல்லசித்த ... ...*
துணியுமித்தகையஞானந் தோற்றுதற்குபாயமியாது ... ...*
பணியெனிற்றேசிகேசன் முசமதாப்பழகாநின்ற ... ...*
வணிதருமாரணாந்த விசாரமேயாகுமன்றே ... ... (௨௬)

பூரணத்தொட்டிலுக்குட் சிடனும்புதல்வன்றானுங் ... ...*
காரணசொரூபானந்த கண்வளர்ந்திடுவானாக ... ... ...*
வாரணம்பாடுமென்றும் தனக்கனியமாஞ்சித்தைத் ... ...*
தாரணம்பண்ணவொட்டாத் தடையெவைசாற்றுமென்னில் (௨௭)

தனுகரணங்களேநாஞ் சகமதேசத்யமென்னப்... ... ...*
பனுமிருவகையுந்தானே பதிபந்தமென்னலாகு... ... ...*
மனையதோர்பதிபந்தத்தை யசற்றுவதெந்தவண்ணம் ... ...*
கனைதலுந்திரையுமில்லாக் கருணையங்கடலேயென்னில் ... (சஅ)

தடையினைத்தள்ளல்புத்தி தன்னையும்புத்திதன்னாற் ... ...*
கடைநடுமுதல்தாகக் கற்பிதவுலகையுந்தா ... ... ...*
னடையவுங்கண்டுநிற்கு மறிவுமாத்திரந்தானாக ... ... ...*
விடைவிடாதனுசந்தான மியற்றுதலாகுமைந்தா ... (சகூ)

இவ்விதவுபதேசத்தை யிருசெவியாரக்கேட்டே... ... ...*
யவ்வியமகன்றசீட னஞ்சலியத்தனாகித் ... ... ...*
திவ்வியகுருவின்பொற்றாள் சிரமுறவணங்கிவாழ்த்திச் ... ...*
செவ்வியநிட்டைகூடிச் சித்திரம்போலிருந்தான் ... (ருய)

வேறு.

இருந்தானெடும்போதொருவழக்கா விளஞ்சேயிழையையொருவிடங்கன் ...*
பிரிந்தாலென்னச்சமாதிநிலை பிரிந்தானிரண்டுகண்களினீ ... ... ...*
ரரும்பாகரமஞ்சலிமுகிழா வகநெக்குருகாவாய்குழறு... ... ...*
பெருந்தாரகசற்குருவருளைப் பேணிவியந்துசரண்பணிந்தான்... ... (ருக)

எனதுசரிதநினைக்கினைகைக் கிடமாமெனக்கேயிதையருளான் ... ...*
மனதுளறியாதொருநாய்க்கு மணிப்பீடிகையிட்டதுபோலத் ... ... ...*
தனதுகடனுவலிதெனையுந் தடுத்தாண்டிரண்டொன்றென்னாத ... ...*
கனதன்னிலையையளித்தநின்க் கறியேன்வேறுகைம்மாறே ... ... (ருஉ)

அருவாயெனக்குநெடுங்கால மமிழ்தின்சுவைபோலிருந்தருள்வான் ... ...*
குருவாய்வந்ததிருக்கோலக் குறிப்பையுணர்ந்தவக்கணமே... ... ...*
யுருவாய்ப்பிறக்கும்வழியடைத்தே னுணர்ந்தேனென்னைச்சுகம்பெற்றே ... ...*
னொருவாமுத்தியளித்தருளெங் கோமானிற்கேதுதவிசெய்கேன் ... ...(ருங)

என்றுபழிச்சிக்குருவருளா லியார்க்குமவிரோதமதாக ... ... ...*
நின்றுநல்லோர்க்கதையுரைத்து நினைத்துங்கொடியமாயையினை ... ...*
வென்றுஞானவிநோதமதாம் விளையாட்டெய்திச்சின்னாட்பி ... ...*
னென்றுபுனலும்புனலுமென வொன்றுஞ்சொரூபத்தொன்றினனே... ...(ருச)

அந்தநிலையையுரைக்கவெனின் மறையாகமங்கட்கதீதமதாம் ... ...*
அந்தநிலையைநினைக்கவெனி னயன்மாலரற்குமெட்டாரிதாம் ... ...*
அந்தநிலையேசமயங்களனைத்துமோதிமுடிந்ததுவாம் ... ... ...*
அந்தநிலையையடைந்தவன்சே வடித்தூளெமதுமுடிக்கணியாம்... ... (ருரு)

வேறு.

வேதமெய்ப்பொருளையெல்லாம் விரிவறச்சொல்லுமிந்நூல் ... ...*
சாதகஞ்செய்வோரியாருஞ் சாட்சிமாத்திரமேயாகிப் ... ... ...*
பேதமில்வீடுசேர்வார் பேரருண்மூர்த்திசெம்பொற் ... ... ...*
பாததாமரைகள்வாழ்க வாழ்கபல்லூழிவாழ்க... ... ... (ருசு)

சுபோதசிகாமணி முற்றிற்று.

உ

சிவமயம்.

# குருமுறை.

## கழனிவாசல் திருவருணுசலதேசிக

## ரத்நப்பிள்ளைத்தமிழ்.

விக்னேஸ்வரஸ்துதி.

சீர்மேவுநால்வேதமுடியினுபநிடதமுஞ் செவ்வாய்மலர்ந்துரைக்குஞ் ... ...*
சித்தார்த்தபோதமாஞ்சிற்சதானந்தசிவ செம்பொருளுமூடலின்மேலா ...*
யேர்மேவுசிவனுமபேதவடிவாகலா னேசுமேவாத்துவிதமென் ... ...*
றியாவருமுணர்ந்திடற்கங்கைகொடுணர்த்துமதயானைமுகனைத்தொழுதுமால்*
கார்மேவுமஞ்ஞானவிருள்சீத்தெழுந்ததிவகரமணிசுகாதீதமாங் ... ...*
கைவல்யமுதவுசிந்தாமணிநல்வானவர் சிகாமணிவிளங்குஞானத் ... ...*
தார்மாமறைப்புமான்சிவரத்தினமணி சதாசுகக்கண்மணியருந் ... ... ...*
தமர்கள்சூடாமணியெனரியசற்குருமணித் தமிழ்மொழிதழைக்கவென்றே ...*

---

## காப்புப்பருவம்.

விஷ்ணுஸ்துதி.

சுகுணகிரியானந்தவரநதிநறுந்தமிழ்த் தொங்கல்பரபோதமதமா ... ...*
துங்கமனவாம்பரிவிதேகவளநாடுசிற் சுகநகரருட்கேதனங்... ... ...*
குகுணநமனுதியர்களஞ்சுறநடாத்துசெங் கோன்மறைமுழக்குமுரசங் ... ...*
கோதறுதசாங்கமாக்கொண்டவருணுசலக் குரிசிலைக்காத்தருள்கவே ... ...*
யகுணநெடுமாயவெங்கோடையால்வாடுமுயி ராம்பயிர்தழைப்பநினைவோ ... ...*
டயர்வெனுந்திரையில்பரிபுரணகெம்பீரமா யாழ்பரங்கடல்குடித்துத்... ...*
திகழ்மோட்சலட்சுமியெனுஞ்சோதிமின்னலொளி செய்யவருள்வெற்பிவர்ந்து ...*
சிவஞானவமிழ்தமழைகைம்மாறிலாதுபொழி செங்கட்கருங்கொண்டலே (க)

சதாசிவஸ்துதி.

சிவஞானவடிவமுண்டாக்கியருளாஞ்சுவைத் தெள்ளமுதமூட்டிவன்கட் ... ...*
சிவபோதத்தைக்குழைத்துஞாதாதியைத் திசழாமலாவரித்தே ... ...*
யுவமானமற்றபோதானந்தவெள்ளமே யொருதாமெனத்தெருட்டு ... ...*
மோங்குதிருவிளையாடலடியரிதயாம்பரத் துறுகடவுளைத்துதிப்பாம் ... ...*
நவமானநறவொழுகுகுமுதமெனவண்கைமலர் நாளுமுகுளிதமாகவு ... ...*
நளினமெனவேயெளியனகமலரவுஞ்செயிளஞாயிறெனவேநிறைந்த ... ...*
பவமானவிருள்பருகியரியமெய்ப்பத்தியாம் பரவையின்முகட்டுதித்துப்... ...*
பரமசுகலீலைபுரியருணுசலப்பெயர்கொள் பான்மகவளிக்கவென்றே ... (உ)

## சிவகாமிஸ்துதி—வேறு.

பூதமாமறைநூபுரமோலிடு பாதபுராதனனைப் ... ... *
பூரணனைச்சககாரணனைச்சுக போதமதானவனைத் ... *
தீனதயாநிதியாகவிளங்கிய தெய்வசிகாமணியைச் ... ...*
சீரருணசலஞானவரோதய சேயிணையருள்புரிக ... ... *
மானதமுன்றனுவாகியமுப்புர மாளுறமெய்யுணர்வாம் ... ... *
வன்னிவிடுத்தொருபுன்னகைகொண்டுறை வானவனோர்புடையிற்... *
பானுவினொண்கதிர்மானவிருந்தருள் பாலிதமேபுரியும் ... ... *
பானல்விழிச்சிவகாமசௌந்தர பச்சையிளங்கிளியே ... ... (௩)

## விநாயகர்ஸ்துதி—வேறு.

பெருமாமதியெனவகமேவளர்தரு பிள்ளைப்பெருமாளைக் ... *
குருமாமணியெனுமருணசலவெங் கோவைக்காவல்செயும் ... *
வருமாலுலகுயர்சிவமேயெனவலம் வந்தோர்கனிவாங்கும் ... *
திருமூலப்பிரணவமந்த்ரார்த்த தேஜோமயவடிவே ... ... (௪)

## சுப்பிரமணியர்ஸ்துதி—வேறு.

பனிமால்வரைமிசையுத்பவமாகிப்பரஞ்சோதி ... ... ... *
படருந்தருவைச்சூழ்தருபைம்பூங்கொடிதந்த ... ... *
கனியாகியமுருகன்திருப்பொன்னங்கழற்போதைக் ... ... *
கடையேமுடிமிசைவைத்திருகைகூப்புதல்செய்வாஞ் ... *
செனியாவழிஞானக்குலதீபங்கனியமிர்தஞ் ... ... *
சிறியேங்குடிமுழுதாண்டருள்செய்யுங்குலதெய்வந் ... ... *
தனிநாயகமெனவேயொருதானேயருளுருவாய்த் ... ... *
தரைமேல்வருகுருராயமதலையைப்புரந்திடவே ... ... (௫)

## விபூதிஸ்துதி—வேறு.

சுருதிவடிவாள்கொடுவிடயச் சூழ்காடெறிந்துவெளியாக்கித் ... *
துரியமெனுநல்விதையூன்றித் தொல்லாரருணன்னீர்பாய்ச்சிக் ... *
கருதுமொருமெய்ச்சிவபோகங் கையாடுழவருறைதருதென் ... *
கழனிவாயற்பதிவாழுங் கருணலயனைக்காத்திடுமால் ... *
திருகுசிவப்பழமலத்தைச் செங்கைவாங்கிமெய்ஞ்ஞானத் ... *
தீயிற்புகட்டவதிற்பூத்துத் திருந்தவருந்திற்பவரோகம் ... *
பெரிதுதணித்துமேலணியிற் பேதக்குணுங்குதனையோட்டிப் ... *
பேரானந்தசித்திதரும் பிறங்குதெய்வத்திருநீறே... ... (௬)

## உருத்ராட்சஸ்துதி—வேறு.

மன்னுயிர்கட்கடுமின்னலியற்றுற வந்துழியஞ்சுமுக ... *
மற்றவைதம்வயினுற்றெரியிற்செறின் மாறலிலாறுமுக ... *
மின்னவைதத்தமுளத்துறனல்விதி யென்னவருட்கடலூற் ... *
றெய்தியிருந்தருள்பசுபதிவிழிவழி யெழுமணியைத்தொழுவாம் ... *

தன்னிகர்மெய்த்தவர்சற்குருநற்கழ றண்கமலம்புகுமா ... *
தவளநிறப்பவளச்சரணம்பொற் றழைவிரிசிறையன்ன ... *
முன்னுறவுற்றிருள்வாய்புரிகண்படு முளரிமலர்ப்பொய்கை ... *
மொய்த்திடுநற்கழனிப்பதிதேசிக முத்தையளித்திடவே ... (எ)

பஞ்சாக்ஷரஸ்துதி— வேறு.

பவசலதிவரையிவரவந்தநற்பாதையைப் ... ... ... *
பழவடியரகமருவுசெஞ்சுடர்ச்சோதியைத் ... ... *
துவளுமதமலையனையவைம்புலத்தோட்டியைத் ... ... *
துரியசிவனுரியபெயரைந்தினைப்போற்றுதுங் ... ...*
கவலுநினைவயர்வகல்மொய்த்ததற்சாட்சியைக் ... ... *
கரமணியினுதவியெதிருற்றகட்காட்சியை ... ... *
யவலினளிமுரல்கழனியம்பதித்தீர்த்தனை ... ... ... *
யருணகிரியெனநிலவுசுந்தரற்காக்கவே ... ... ... (அ)

பூமகள்ஸ்துதி—வேறு.

நாதஞ்சிலம்புஞ்சலஞ்சலமு நல்விந்தெஃகப்புடையுமெனு ... *
நளினந்தாங்கிக்குரம்பைமுத ஞகமெனும்பன்னகவணையிற் ... *
போதஞ்சுருங்கிச்சுகத்துறங்கும் புத்தேளிதயப்பூந்தவிசிற் ... *
போந்தின்னருள்வாழ்வுதவுநற் பூமாமகளைப்போற்றுதுமால் ... *
வேதஞ்சுரும்புக்குழுவெனச்சூழ் விமலானந்தக்களியருந்தி ... *
விண்ணோர்பண்சேயிசைமுரன்று விளையாட்டயரும்பங்கயப்பூம் ... *
பாதஞ்சிரத்திற்பொறித்தருளிப் படிறேன்றனையும்வலிதாளும் *
பரமானந்தச்செல்வனையே பாதுகாத்திங்கருள்செயவே ... (௯)

நாமகள்ஸ்துதி—வேறு.

மூவர்மாமறைகள்சூழுதற்கரிய மோனஞானசுவிநோதனை ... *
முடிராவினிசிகோடியென்னவரு மோகபாசவதினாசனை ... *
தீவமிந்திரவிகோடியென்னவொளிர் சிற்சுகோதயவிலாசனைச் *
சீர்விளங்குமருணாசலப்பெரிய தேசிகேசனையளிக்குமால் ... *
வீவிலாதவமுசோகமென்னுமருள் வெள்ளையன்னமிசையூர்தியாய் *
மேவுமிவ்வுலகமாயழிந்திட விழித்திமைத்தல்புரிவேதனார் ... *
நாவெனுங்கமலபீடமேவிமறை நாலுமோதியடியார்கள்பான் ... *
ஞானவித்தையையளித்திலங்குமெனி ஞவிலுற்றகலைவாணியே ...(௰)

பலதேவர்ஸ்துதி—வேறு.

இமையவர்விஞ்சையர்பைரவரிந்திர ரிரவிகள்சந்திரர்சூ ... *
ழெண்டிசையோர்வசுவெண்மர்மருத்துவ ரேழ்மறைநன்முனிவ *
ரமுதுறழின்மொழியெழுமடமங்கைய ரங்கமலத்துறையு ... *
மாதிநல்வேதியனுதியர்வந்திவ ஞாருளோபுரிவா ... *
ரமைதருபொன்மகளெழிலுருவம்புனை யங்கைதிருந்தியபி ... *
னம்புயனுயிரொடுவெளாதருமோவிய மன்னமலர்க்கையார் *
சுமைதருகொங்கைகுலுங்கநடம்புரி சொர்னமணிக்கோயிற் ... *
றுயநலூரருணாசலதேசிக சொச்சுகருபனையே ... ... (௧௧)

காப்புப்பருவ முற்றிற்று.

## செங்கீரைப்பருவம்.

பூமலியனந்தசிற்சொலிதமடவன்னமென் பூண்முலையெடுத்தணைத்துப் *
புனிதவருள்வாசநன்னீர்கொடபிடேகம் புரிந்துமெய்ஞ்ஞானம்பரத் *
தூமலிபொலன்றுகில்கொடீரம்புலர்த்தியத் துவிதவெண்காப்பணிந்து *
துரியமெனுநன்னிலத்திலகமிட்டாரணச் சொர்னமணிதிபதட்டா *
லாமலியனந்தகல்யாணகுணமங்கையர்க ளாலத்தியேத்தெடுத்தங் *
காறுமுபசாந்தகுணவால்வளையினுஞ்முகந் தனுபவானந்தவெள்ளத் *
தேமலியுமின்னமிர்தருத்தவளருங்குழவி செங்கீரையாடியருளே *
திமிலமறையறிவரியசமரசசுவானுபவ செங்கீரையாடியருளே ... (௧)

மகிமைதருசித்தார்த்தபோதமாவாக்கிய மணித்தொட்டிலிற்பிணித்த *
மலர்முண்டகாதியுபநிடதமெனுமாடக வடந்தடக்கைப்பிடித்துச்
சுகமொழியுபேட்சையுபசாந்திநல்விசாரணை சுபேட்சையருமேய்மைமுன்னுஞ்
சுந்தரப்பாவையரசைத்திடச்சுகபோத சொரூபனுஞ்சிற்சத்தியு ... *
மகமகிழ்வுகூர்தரவிவேகனிஷ்க்காமனோடக்கனவிரோதனின்று *
ளரவிந்தமணிமகுடமுடிசூடியஞ்சலியொ டாசிபலகூறிநிற்பத் *
திகழ்வாலசூரியர்கள்கோடியெனவொளிர்குரவ செங்கீரையாடியருளே *
திமிலமறையறிவரியசமரசசுவானுபவ செங்கீரையாடியருளே... (௨)

குருமொழியெனுஞ்சுடிகைமுடியினுடச்சிரவணக்குழைகள்செவியினுடக்
குலமறைப்பொருணறவமொழுகுமடலவிழ்கடிக் குமுதவாயிதழ்களாடப்
பொருசருவசங்கப்பரித்யாகமாமணிப் பொற்றொடிகளங்கையாடப் *
போதசுகமுதவுசெஞ்சிறடியினுகமப் புதநூபுரங்களாட ... *
மருவுமிருவினைகடிண்டாடவகடிதகடித மாயைநெஞ்சுசலாட *
வண்மைசெறியடியவர்கள்கொண்டாடவஞ்ஞகுல மகனுவிசூறையாடத்
திருவளர்பொழிற்கழனியம்பதியிலுறைகுரவ செங்கீரையாடியருளே *
திமிலமறையறிவரியசமரசசுவானுபவ செங்கீரையாடியருளே ... (௩)

பௌவவெண்டரளமணிமாலைநாலுந்தனப் பாவையர்கடாளினேவும்...*
பணிவிடைகண்முந்தைபுரிபாக்யமெனமீக்கொளேப்பாவியர்களாழுங்ிமையன்
கௌவுவாய்விண்டகன்களையுமிழினும்விடாக் கடும்பவவளற்றிலாழுங் *
கடையனையுமருவராதாரருள்கரந்தெழிற் கடைநோக்கமுட்புறம்புந் *
தௌவலறவைத்தசும்பொழுகுடலினன்யசை தன்யவெழிலுருவமாக்கிச்
சச்சிதானந்தசுகவெள்ளங்குடைந்திடத் தாட்கமலமுடிசூடியே ... *
செவ்விதியினுண்டநற்றேசிகசிகாமணீ செங்கீரையாடியருளே ... *
திவ்யகல்யாணகுணபூஷணவலங்கார செங்கீரையாடியருளே... (௪)

வேறு.

தாணுவிடத்தேசோரனெழுந்தாங்கஞ்சோதித் ... *
தாணுவிடத்தேசிவனமைந்தானென்றோர்ந்தே ... *
பூணினிடத்தாரோபமகன்றுற்பொன்னேயாம் ... ... *
போலறிவுற்றுலோர்சிவனீயேயென்றோனே ... ... *
காணுதலுற்றேவானவருஞ்சூழெம்மானே ... ... *
சாதுமதத்தாரோர்வினிணங்காமெய்ஞ்ஞானச் ... *
சேணுறவுற்றேயார்பவசெங்கோசெங்கீரை ... ... *
தேசிகநற்சூடாமணிசெங்கோசெங்கீரை ... ... (௫)

வேறு.

இளவாணகைவார்தனநீளறலோ தியர்மேனசைவிட்டே ... *
யிகமேபரமேவருசிரொகினங் காலோதனமென்றே ... *
யுளமுடெழுமாசைகளற்றிகல்சே ரொருசேவியமுன்னு ... *
முளமாசகலாமதமாறினுமே யுளமானமதற்றே ... ... *
யுளதேயிலதேயுருவேயருவே யொளியேவெளியேயென் ... *
றேதும்மவையாயலவாமுணர்வே யொருதாமெனவுய்த்தே ... *
தெளிவேமிருவாரிதயாலயனே செங்கோசெங்கீரை ... *
திருவாரருணாசலநாயகமே செங்கோசெங்கீரை ... ... (௬)

தனமுந்தனுவும்மனமுங்குருவின் சரணந்தனில்வைத்தே ... *
சரணம்புரியுமதுவேமறைசொற் றனம்பணியற்றே ... *
சினமுங்கனமுஞ்சுகமுந்துயருஞ் செறியும்பொழுதெல்லாஞ் ... *
சிவனேத்தொழிலாமெனவுன்னுதலே செபுநற்றவநாளு ... *
நனவுங்கனவுமயர்வுங்கெடினு நடமற்றோர்படியாய் ... *
நணுகுங்கரிநானெனுமுட்டிடமே ஞானம்மெனவோதித் ... *
தினமுந்நினைவாருறவாய்வருவோய் செங்கோசெங்கீரை ... *
திருவாரருணாசலநாயகமே செங்கோசெங்கீரை ... (௭)

சுரநதியதனைக்கானல்புனற்கொடு துங்கஞ்செயுமாறுஞ் ... *
சுடர்விடுபரிதிக்கிருளறவோவிய சுடரொதிரிடுமாறுஞ் ... *
சருவரியிரியக்கார்நிறமுகிலைச் சமர்பொரவிடுமாறுந் ... *
தவமுதல்வழிகொண்டெனதுருவுணரத்தளர்வுறுமமையத்தே *
பருவரலொழியப்பரசுகநிலைசெம் பவளத்திருவாயாற் ... *
பழமொழியதுகொண்டொருநொடியதனிற் பகல்விடவருள்செய்தே *
திருமறைமுடியின்வளர்தருகுருபர செங்கோசெங்கீரை ... *
சீரருணாசலஞானவரோதய செங்கோசெங்கீரை ... ... (௮)

அடியவராரியனருள்வழியெதிர்பார்த் தமர்தலுமருள்பொங்கி ... *
யவனுரைமொழியுள்ளாமவையேற்றங் கமைதலும்விதியென்றே *
குடவளைசுடர்வான்றுளிவிழுகாறுங் குவிவாயங்காந்துங் ... *
கொழுவியமீனங்கவர்வான்வெள்ளிய குருகுகளசைவற்று ... *
மடலவிழ்கமலப்பொய்கையுமோடையு மன்னியுணர்த்தலுறு ... *
மகிமைகணிறைதேன்கழனியெனுஞ்சீர் மாநகருக்கரசே ... *
செடியருள்வடிவாளேந்துபுயாசல செங்கோசெங்கீரை ... *
சீரருணாசலஞானவரோதய செங்கோசெங்கீரை ... ...(௯)

ஒருமனையுற்றவருதவுவதுய்த்திடி னென்றுறுமயலென்றே ... *
யூர்கடொறும்பலிகொண்டவனுண்டுறு மொண்டுறவரைமான *
மருவுமிதழ்க்குமுதங்கழுநீரொடு வனசமுதற்செழுமு ... *
மலர்தொறும்விரைமகரந்தமருந்துற வண்டுகள்புக்குழவே ... *
பெருகுநறுந்தேனூறெனவோடிப் பேரருளிற்பாயப் ... ... *
பேரின்பெனவிளைவார்தருகழனிப் பேரணிநகர்வாழ்வோ ... *
யருமறைபுச்சியிலாடுபதாம்புய வாடுகசெங்கீரை ... ... *
யாரியனுயெனையாளுடைநாயக வாடுகசெங்கீரை ... ...(௰)

செங்கீரைப்பருவமுற்றிற்று.

## தாலப்பருவம்.

மந்தாநிலப்பைங்குழவிதவழ் மலயக்குறுமாதவமுனிவன் ... ... ...*
மறியுந்தரங்கக்கடல்குடித்துமருந்தைப்பொருவுந்தமிழ்க்கடலைத் *
தந்தாங்கெனதுவினைக்கடலுந் தாகமோகப்பெருங்கடலுந் ... ...*
தணவாப்பிறவிக்கருங்கடலுந் தண்ணாருட்கண்விருந்தாக்கிச் ... *
சிந்தாகுலத்தைத்தவிர்க்குமின்பத் தெள்ளாரமுதக்கடல்விரித்துத்... ...*
தீராக்கவலைதீர்க்கவருஞ் சிந்தாமணியேவிரைகமழுஞ்... ... *
சந்தார்பொழிற்றென்கழனிநகர்த் தலைவாதாலோதாலேலோ ... ...*
தவத்தோரிதயப்பூந்தவிசிற் றனிநாயகமேதாலேலோ ... ... (௧)

மாயத்திருக்கிலதிஷ்டான வடிவச்சாயைகளைப்பொருளா ... ...*
மதித்தேயுழன்றுபினரருளான் மதிக்குள்ரவிச்சுகிப்பவர்போற் ... *
றூயத்திரண்டொறுஞ்சாயை தோன்றவதிலொன்றினையிவணந் ... ...*
தோகையன்னாளேகொல்பணைத் துணைத்தோண்ஞெமுங்கப்புல்லுவமென் *
றேயத்தழீஇப்பயன்காணுதிருப்ப நகைத்துக்கரங்கொட்டி ... ...*
யிளவாணகைவந்தாடவர்மார் பிறுகப்புணர்ந்துவிளையாடுஞ் ... *
சாயப்பளிக்குமணிமாடக் கழனிநகரோய்தாலேலோ... ... ...*
தவத்தோரிதயப்பூந்தவிசிற் றனிநாயகமேதாலேலோ... ... (௨)

வடிவேனயனங்கொடுவுயிரை வாங்கிரயங்குடியேற்று ... ...*
மகளிர்திறங்களுணர்ந்துமவர் வழிச்சென்மாக்கள்போலாது ... *
கடிவாரீசத்துகளருந்திக் கண்ணீர்கொடுவாயலம்பிவருங் ... ...*
காலைப்பெடைஞெண்டெதிர்சென்று காணுவிடிறுங்கதைநின்றன் ... *
னடியார்போலுந்துறவுற்றே யம்பொற்குறுமுட்டாளவை ... ...*
னமருஞ்செந்நெற்றாளம்விளை யணியார்கழனிநகர்க்கரசே ... *
தடமாவெனதுவுளம்பூத்த சரணம்புயனேதாலேலோ ... ...*
தவத்தோரிதயப்பூந்தவிசிற் றனிநாயகமேதாலேலோ... ... (௩)

சுருதியூகமனுபவத்தாற் றுகளற்றெருநஞ்சுயவடிவஞ் ... ...*
சுடர்விட்டெறிக்குஞ்சிவமென்றே தோன்றுமளவுஞ்சிறுவருக்கு ... *
வரையும்யோகர்போற்றும்பி மதுவுண்டயருந்தென்புடைசூழ்... ... *
மயறீரிசைகண்முரல்வனமார் மாடந்தோறுமடியவரைக் ... .. *
கருதியாகஞ்செயப்புனைந்த கவினாரன்னகொடித்துகில்கள் ... ... *
காலிற்புடைக்கக்கற்பகப்பூங் காவிற்பிலிற்றுமதுவெள்ளந் ... ...*
தரையுற்றெருதேனுறெனப்பாய் தருமாநகரோய்தாலேலோ... ... *
தவத்தோரிதயப்பூந்தவிசிற் றனிநாயகமேதாலேலோ... ... (௪)

தங்கண்மனக்கற்பனைபுலகைத் தாமேயெனக்கண்டொழியாது ... ...*
தவம்பூண்டுழலுமவர்களைநின் றமர்கணேக்கிநகைப்பதுபோற் ... *
பொங்கியுமிழ்மும்மதக்கைமலை புகறன்னிழற்கண்டெழிற்படிகப் ... ...*
பொருப்பிற்பாயுந்தொறுமுறிந்து பொருகோட்டுதிர்ந்த்திலங்கொணர்ந்து *
தங்கவிழையிற்கோத்தணியுந் தாமமணிமாளிகைப்பந்தி ... ... *
தயங்குங்குருக்கேத்திரதெய்வத் தலமாங்கழனித்திருப்பதியிற் ... ...*
றங்கியொளிருந்திருவருணு சலதேசிகனேதாலேலோ .. ... ...*
தவத்தோரிதயப்பூந்தவிசிற் றனிநாயகமேதாலேலோ ... ... (௫)

வேறு.

கனவெனநினைவிற்பலவிதவுலகங் காணுறுமஙநினைவுங்... ... ... ...*
ககனத்துறுகருநிறமெனவுயர்சிற் ககனத்துறுமதனுற் ... ... *
கனகமுமணியும்பணியெனவுலகங் காணுறுநாமென்றே ... ... ...*
கண்டுசுகப்பலனுண்ணும்விகங்கக் கவிநெறியினர்போலப் ... *
பனிமலைமயிலியல்கொஞ்சுறுபஞ்ச வனக்கடவுட்கிளிகள் ... ...*
படர்தருவான்வழிவந்துமிசைந்திடு பற்பல்கனித்தருசூழ் ... *
தனிகழனுபுரிதுறவர்சிகாமணி தாலோதாலேலோ ... ... ... ...*
தமர்களுளத்தெழுதிமிரதிவாகர தாலோதாலேலோ ... ... (சு)

அருமறைமொழியுமவாந்திரமொழிக ளனைத்துமெடுத்தெறியா ... ... *
வனுபவமுயர்மகவாக்கியவழிபெறுமாரியர்தஞ்சமெனு ... ...*
வருபவருக்கருண்முறையெனவேழமு மாந்திரதம்பின்னர் ... ... *
வருசிறுகளிறுகளுண்பானிலையை மறித்துமுறித்தெறியா . ... ...*
விரிதரவேழமொடிக்குந்தோறு மெழிற்பணிலத்திரள்க ... ... *
ளெவ்வுழியும்பரவுற்றுமெண்டல மிதுகொலெனும்படிசூழ் ... ...*
தருகழனுபுரிதுறவர்சிகாமணி தாலோதாலேலோ ... ... ... *
தன்மயநின்மலசின்மயகுருபர தாலோதாலேலோ... ... (எ)

தம்பயனயலவருண்பயனீவிச் சாந்தகுணத்தவர்பாற் ... ... ...*
றர்க்கிகள்புக்குவுழக்கலின்மேதிக டண்புனலோடைபுகச் ... *
செம்பரநல்வடிவாகவுயிர்த்திர ளைச்செயருட்கணரின்... ... ... ...*
றிரள்படுசினையைவிழித்துறசேலுகள் சிறுகன்றெனமுட்டக்... ... *
கும்பமெனும்படிமடிசொரிவெள்ளங் கொண்டல்வணன்றுயிலுங் ... ...*
குணகடலெனவொளிர்கழனிப்பதியிற் கோதறுசிவஞானச் ... *
சம்புடமெனவருதுறவர்சிகாமணி தாலோதாலேலோ ... ... ...*
தானவணுகியமோனசுகோதய தாலோதாலேலோ ... ... (அ)

இருவினைவாழைக்காடுமுறித்தெறி யிபமேதாலேலோ ... ... ...*
வீறிலவித்தைவேழமுரித்தரு ளேறேதாலேலோ... ... ... *
பொருவருமாயைக்கோளரியடுசிம் புள்ளேதாலேலோ ... ... ...*
பொங்கியதாபக்கனலறவருள்பொழி புயலேதாலேலோ... ... *
கருவெனுநஞ்சமொழித்துறுமமுதக் கடலேதாலேலோ ... ...*
கலியதுதீரப்படிமிசைவந்தருள் கண்ணேதாலேலோ... ... *
பரசுகமுதவுங்கற்பகமெனவரு பண்பாதாலேலோ ... ...*
படிறனையாளுங்கருணலயகுரு பரனேதாலேலோ ... ... (கூ)

வேறு.

மோனமுணர்த்துங்கையாய்தாலோதாலேலோ ... ... ...*
முத்தியளிக்குங்காலாய் தாலோதாலேலோ... ... ... *
ஞானமுரைக்கும்வாயாய் தாலோதாலேலோ ... ... ...*
நன்கருள்பொங்கும்விழியாய் தாலோதாலேலோ ... ... *
வானமுடுக்குங்கலையாய் தாலோதாலேலோ ... ... ...*
வெண்பொடிபூத்தொளிர்மெய்யாய் தாலோதாலேலோ ... *
தேனினினிக்குமொழியாய் தாலோதாலேலோ ... ... ...*
சீரருணசலதேசிக தாலோதாலேலோ ... ... ... (௰)

தாலப்பருவமுற்றிற்று.

## சப்பாணிப்பருவம்.

மணித்திரள்கொழிக்குந்திரைக்கடற்றூசணியுமானிலத்தையல்பூத்த ... *
வான்பொருள்கடோறுமுறுநாமரூபங்கடமைமாயையெனவேயகற்றிக் ...*
கணிப்பரியசச்சிதானந்தசொரூபத்தினைக்கரதலாமலகமாகக் ... ... *
கண்டனுபவித்தவுபசாந்தநடையோர்கணின்காற்கமலமுறுவதேய்ப்பப் ...*
பணித்தவண்புனலைப்பிறித்தமுதமுண்டெழிற்பைஞ்சிறையவோதிமங்கள்... *
பங்கயக்கோயிலுறைவிழவருக்கழனியம்பதியிலெம்பிறவிநோயைத் ...*
தணிக்கவருஞானபண்டிதசிகாரத்நமேசப்பாணிகொட்டியருளே ... *
தனையறியும்வழியையொருமொழியிலருள்பரகுரவசப்பாணிகொட்டியருளே()

காயவன்மீகமுறுமுள்ளமெனுமைந்தலைக்கட்செவியடங்குமாற்றங் ... ...*
கருணையின்முழங்கிச்சிதாகாயவெளியெலாங்கம்மிப்படர்ந்துமின்னி... *
நேயமழைபொழியுமருண்முகிலேனைக்கமுற்றடியர்நித்தமொருநித்தமிடல்போ ...*
னெடுவானெழுந்தொழுகுதிங்கண்மும்மாரிபொழிநீனிறக்கொண்டல்கண்டு *
சாயற்கலாபமயிலாடுபூஞ்சோலைசெறிதைவதக்கன்னிநாடென் ... ...*
றனாமகண்முகத்தணிநுதற்றிலகமென்னவொளிர்தண்கழனியம்பதியினிற் *
றுயெனவெழுந்தெனையுமாண்டகருணாநிதிசப்பாணிகொட்டியருளே... ...*
தனையறியும்வழியையொருமொழியிலருள்பரகுரவசப்பாணிகொட்டியருளே ()

பந்தமுறுநெஞ்செனவிருண்டவணர்வார்குழற்பாவையர்கடனையர்செல்வம் ...*
பற்றுகைவிடுத்துவாய்மலராதசென்றருட்பார்வையுடையான்றிருத்தாட் *
கந்தமகரந்தவரவிந்தவின்னீழற்கலந்தவனருட்சிர்த்தியைக்... ... ...*
கனிவாயினிசைபாடுநல்லடியர்போற்கருங்காகமுட்பஞ்சரத்தின் ... *
முந்துறவிருந்திசைதிருந்துகுரலொலியாதுமூடிப்பறந்தோடியே ... ...*
முதிருமதிமதுரப்பழச்சோலைவந்தெய்திமுகினிறக்கோகிலங்கள் ... *
சந்தைவிசைபாடுதென்கழனிவாயற்கிறைவசப்பாணிகொட்டியருளே... ...*
தனையறியும்வழியையொருமொழியிலருள்பரகுரவசப்பாணிகொட்டியருளே()

அண்டமுகடளவுகடைவெள்ளமுமணுப்புரைய வார்த்தெழுதுயர்க்கடலையோ ...*
ரணைநொடியினிற்சுவறிடக்கடைக்கண்வத்தகண்டசின்மயரூபமாய்த் *
பண்டையினிருக்கவருள்குரவனருளினையுனிப்பார்த்துளநினைத்திடுதொறும் ...*
பலபலெனவடியர்விழிசிந்துபுனலெனமடற்பங்கயமலர்ந்துகுக்கும்... *
வெண்டரளநற்றிரளரன்கொலுவிருக்குமொருவெள்ளியங்குன்றமுறழ... ...*
மேவியொளிரங்கழனிவாயன்மணிமுத்தமேவிளைநறவுசொப்புளிக்குந் *
தண்டமிழிலங்கலணிமார்பவதிரூபனேசப்பாணிகொட்டியருளே ... ...*
தனையறியும்வழியையொருமொழியிலருள்பரகுரவசப்பாணிகொட்டியருளே()

செஞ்சொலொன்றென்றெழுகலொன்றுநர்கள்வெள்கிச்சிரங்கவிழ்வுறத்தளிர்க்கைச்
சேயிழையரார்க்குமுழவத்தொடுநடிக்குந் திறற்குடுமிமாடநிரைசூழ் ...*
மஞ்சுலவுமிஞ்சிகடொறும்பரசிவங்கருணை வெள்ளவுருவங்கொடிங்ஙன் ... *
வந்துதரநோக்கறவிருந்தருளிருந்திருவைவாரிமழையிற்சொரிதலின் ...*
சஞ்சலம்வம்பிறவிதிர்தரவிரும்புநர்கடாழாதுவம்மினென்னச் .. *
சைகைசெயுமாறெனமணிக்கொடிகளாடுபூந்தண்கழனிவாயலரசே... ...*
தஞ்சமெனவந்தவனையஞ்சல்செய்மலர்க்கைகொடுசப்பாணிகொட்டியருளே *
தத்வமசிசத்யமெனுமுத்திரைகொளத்தவிறைசப்பாணிகொட்டியருளே. (௫)

ஆற்றுறுதவப்பலனதெய்தலெஞ்ஞான்றுகொ லெனையமறமுன்னருண்ண ... ...*
லானமணிநீர்தலைசுமந்துதருதெங்கின தருங்கனிதுடுந்துடுமெனுங்... ...*
கூற்றுறவிழுந்தொறுமறிஞரடுசீற்றமுட் கொண்டுவிடுமாறகன்று ... ... ...*
கூடுறுதெணீரொடுவிரிஞ்சனெடுமாறிருக் கோலமமைகொள்ளுநரெலாம் ...*
வீற்றுறுசரோருகமுமங்கைகொள்வளைப்படையு மேவிநிறைவாவிசூழு ... ...*
மேதினிமகட்கொருசுமங்கலமெனத்திகழ் வியன்கழனிவாயலரசே... ...*
சாற்றரியபத்தர்முடிவைத்துறுமலர்க்கைகொடு சப்பாணிகொட்டியருளே ... ...*
தத்வமசிசத்யமெனுமுத்திரைகொளத்தவிறை சப்பாணிகொட்டியருளே...(௬)

பழமறைசொல்வாக்கியக்கிகலுநர்கடலையெனப் பார்க்குளாசினிகனிந்து ... ...*
படீரெனவெடித்தவொள்வாயெழுமனந்தன் பணாமுடிமணிக்கிரணமோர் ...*
சுழுமுனைமுழங்கியெழுமூலவன் றண்கலைச் சோமவட்டத்தைமுட்டுந் ... ...*
தோற்றங்கடுப்பமதிமண்டலமதுற்றுமிளிர் தூய்கழனிவாயன்மேவிக்... ...*
குழலிசையிகந்தமொழிமங்கையர்கள்கற்பைக் குலைத்தருளவீசன்முன்னாட் ...*
கொண்டதுபோலன்றிமணியார்கலியுடுத்தபூங் கோதையின்முகாரவிந்தந் ...*
தழைதரநலுண்பலிகொளங்கமலமென்கைகொடு சப்பாணிகொட்டியருளே ...*
தத்வமசிசத்யமெனுமுத்திரைகொளத்தவிறை சப்பாணிகொட்டியருளே...(௭)

வேறு.

சத்தியநற்சிவதத்துவமெய்ப்பொரு டங்குமுருப்பெயர்கள் ... ...*
சர்ப்பமிரச்சுவிடத்தினுதித்த தரத்தினுதித்தவெனச் ... ...*
சித்தமுறத்தெளிவுற்றலகைப்பெரு தேரொழுநீரெனமுற் ... ...*
செப்புலகத்திகழ்விற்பிரவிர்த்திகள் சொப்பனமொப்பதெனச் ...*
சத்தமொடுத்திகளொத்துவிளங்கிய தன்னனுபூதியினிற் ... ...*
ருனறிவுற்றருளின்பசுகக்கட றன்னிறிளைத்தாடிக்... ... ...*
குத்திரமற்றவுளத்தெழுபேரொளி கொட்டுகசப்பாணி ... ...*
குப்புகணற்கழனிப்பதிதேசிக கொட்டுகசப்பாணி... ... (௮)

திரவசமித்தியமதுரநெடுந்திரை திரணுரைபுற்புதமார்... ... ...*
திவலைகடொறுமுறுதலினவைசுவைமிகு தெண்மணிநீரெனலின் ...*
வரமலிசத்துதிதச்சுகமெப்பொருள் வயினுமிலங்கலினுன் ..., ...*
மருவுசராசரமுழுவதுமொருதம் வடிவமெனக்காணு ... ...*
மரியதவத்தினருளமுறுமனுபவ மறைதொறுமறைதோறு ... ...*
மகமகிழ்வொடுகுறுநகைகொடுவழங்கிஃ தழகெனமெச்சுதலின் ...*
குரவமலர்க்கரவனசமுகிழ்த்திறை கொட்டுகசப்பாணி ... ...*
குலவருணாசலகுரவர்சிகாமணி கொட்டுகசப்பாணி ... (௯)

வேறு.

அரியயனமரர்கடொழுபவ கொட்டுகசப்பாணி... ... ...*
யருமறைமலைமுடிவெழுமொளி கொட்டுகசப்பாணி ... ...*
நிரைநிரைகருவிகள்வரைபவ கொட்டுகசப்பாணி ... ... ...*
நினைவயர்விடைவருமருளிறை கொட்டுகசப்பாணி ... ...*
விரியுலகெழுநிறைபரசுக கொட்டுகசப்பாணி ... ... ...*
விமலமதுதவுறுகுருமணி கொட்டுகசப்பாணி ... ...*
தருமலிகழனிநனகரிறை கொட்டுகசப்பாணி ... ... ...*
தமர்களுளெழுமருடினகர கொட்டுகசப்பாணி ... ... (௰)

சப்பாணிப்பருவமுற்றிற்று.

# முத்தப்பருவம்.

தவவடிவுபூண்டுலேயுமனவானரத்தினைத் தம்வசமுறப்புரிந்து ... ... ...*
சரியைகிரியாயோகமுந்நீர்கடந்துணர்வு தானிலங்காபுரத்தி ... ...*
லவமருவுமூலவாங்காரமெனரக்கனை யதஞ்செய்துசாந்தியென்னு ... ...*
மஞ்சீதையைக்கொண்டுமோட்சவையோத்தியிற் கபிடேகமுடிபுனைந்து ...*
வுவமையறுசுகபோகமுண்ணுமாத்துமராம ரோவாதிறைஞ்சிவாழ்த்து ... ...*
முயர்முத்தராமலிங்கேசனருள்வாய்முத்த முண்டுண்டுளந்தேக்கியே... ...*
சிவமணமொனாளுமணக்குமணிவாய்மலர்ச் செங்கமலமுத்தமருளே ... ...*
தெய்வவருணசலவருட்குரிசில்வாய்மலர்ச் செங்கமலமுத்தமருளே ... (க)

கன்னல்வளைவார்சிலேயனங்கமதவேளொடுங் காலக்கொடுங்கூற்றமுங் ... ...*
கண்டஞ்சுருநிற்பமாறுபடுநூற்றடங் காடெறியவீசுபாசப் ... ...*
பின்னல்வலேவீசஞாதருஞானனேயப் பெரும்பகையினைத்துரப்பப் ... ...*
பேதவாதனைமிருகவேட்டைகாணக்குலவு பீடுடையபூபதியெனு ... ...*
முன்னலருசிவற்கனுதிமறையுறையுறையு மோனவடிவாள்கொடுத்த ... ...*
மூலகாரணராஜகட்கபரமேசனுறை முத்திமாநகரமென்னுஞ் ... ...*
செந்நெல்விளைவார்கழனிவாயன்மணிமுத்தநின் செங்கமலமுத்தமருளே ... ...*
தெய்வவருணசலவருட்குரிசில்வாய்மலர்ச் செங்கமலமுத்தமருளே ... (உ)

விஞ்ஞானவுழவர்களகத்தடம்பணையிடை விசாரனலத்தினுழுது ... ...*
மெய்க்குரவனேவலெருவம்பெயாவோர்மொழிவிதைத்தன்புநீர்புகட்டி ...*
யஞ்ஞானமுற்களைகளைந்துவிளையானந்த மானசிவபோகமதனை ... ...*
யாசுதவுபதிபந்தமாவினத்தாலழிவு றுதவணநின் றளிக்குஞ் ... ...*
சுஞ்ஞானவடிவசெஞ்சால்யவாடீஸ்வரித் தோகைநலணங்கிருக்குஞ் ... ...*
சோலேவளநாட்டிடைமுளைத்தமுழுமதியமே சுடர்மழைக்கருணைமுகிலே ...*
செஞ்ஞானமொழிநறவமொழுகுமிதழ்வாய்மலர்ச் செங்கமலமுத்தமருளே... ...*
தெய்வவருணசலவருட்குரிசில்வாய்மலர்ச் செங்கமலமுத்தமருளே ... (ங)

வேறு.

பொழியுங்கருணைக்கரும்புயலும் போதானந்தத்தடங்கடலும் ... ... ...*
புரணஞானச்செழுங்கரும்பும் புகலுஞ்சாந்தகுணமதியு ... ..*
மழியுங்குரம்பைத்துரந்தபர மாங்காரக்குஞ்சரக்கோடு ... ... ...*
மறமாங்கதலிப்பெருங்காடு மருளாரடிச்செந்தாமரையும் ... ...*
விழையும்படிக்குவிளைந்தநிலா வெண்ணித்திலங்கட்குயிராகி ... ...*
விபுதர்களுக்குமதிப்பரிதாய் விளங்குஞ்சுவையினொருமாற்ற ... ...*
மொழியுங்குதலேச்செங்கனிவாய் முத்தந்தருகமுத்தமே ... ... ...*
மூவாக்கடவுண்மறைதேடு முதல்வாமுத்தந்தருகவே ... ... (ச)

நத்தங்கமஞ்சுலுளைந்துதரு நளிர்வெண்டரளமுதலாக ... ... ...*
நவமாமணிகளெமக்கைய நல்கேலியாமுமவைவேண்டே ... ...*
முத்தங்கொடியபெத்தமொடு முதலுநடுவுமுடிவீறு ... ... ...*
முன்பினுதிப்புமரிப்புமிவை மொழிதற்கரியபரம்பொருளே ... ...*
யுத்தஞ்சுருதியனுபவத்தா லொருதாமெனவுய்த்துணர்ந்திடுவா ... ...*
ஞெண்மாதவர்கட்கொருமாற்ற முதவும்வனசத்திருவாயான் ... ...*
முத்தம்விளையுங்கழனிவரு முத்தாமுத்தந்தருகவே ... ... ...*
மூவாக்கருணைமழைபொழியு முகிலேமுத்தந்தருகவே ... ... (ரு)

எதிர்முற்காலமுன்றினிலு மில்லாதிருந்தேயனுருதவு ... ... ...*
பின்னுக்கொடியமாயையினை யிம்மென்றுாக்குமுனரகற்றி ...*
மதுரித்தெழுந்தகனைத்தானே வழங்குங்கருணைமுதல்வள்ளான் ... ...*
மன்னுமறப்பாவையருளமா மடலூடெழுதிப்பார்த்திருக்கு ... ...*
மதிகச்சிறப்புற்றொளிரழகா வடியேங்கண்கள்களிதூங்க ... ... ...*
வறிவானந்தத்திருவிளையாட் டயருமதலாய்மவுனரச ... ...*
முதிரப்பழுத்தநின்கனிவாய் முத்தந்தருகமுத்தமே ... ... ...*
மும்மைப்பொருட்குமுதன்முளைத்த முதல்வாமுத்தந்தருகவே ... (சு)

வேறு.

அமராயனரிமுனிவர்சனவினு மறியவரிதெனுமத்தமே ... ... ...*
யகிலமிசையொருமனிதவடிவுகொ டறியவருடருமத்தனே ... ...*
தமதுவுளமழலிழுதினுருகுறு தமர்களவைவருசிற்சுகோ ... ... ...*
ததியினனுதினமுழுகவருள்புரி தயவுநிறைவுறுவித்தகா ... ...*
சமயவழிபடுகுழியினிழிதரு தமியனறிவுதிருத்தியே ... ... ...*
தரணிமதிசுடர்வரினுமொருவுவ தருமையெனவுளமொய்த்தவோர் ...*
முமலவிருடெறவளவிலொளிவிடு முனிவபணிமணிமுத்தமே ... ...*
மொழியுமலர்மணமுறழவுலகுறு முதல்வபணிமணிமுத்தமே. ... (எ)

வேறு.

அகவிழிபுதைதரவெழுமலவிருளை யடர்த்துலகத்திரளா ... ... ...*
மளவறுவிவிதவல்வினைபுரியலகை யகற்றிமறைப்பொருளா ... ...*
நகைமடன்முளரிகள்விகசிதமுறுவணலர்த்திபொறித்திரளா ... ...*
நணுகியவுடுவினமுயிரறிவெனுமதி நட்டமுறப்புரியா ... ...*
சுகசிவபதமுறுநெறியதுதெரிய துலக்கிமதத்துவமார் ... ... ...*
சுகுணநலுதயபொலங்குவடதனி லுதித்தவருட்சுடரோ ... ...*
முகமலர்வுறநினதழகியதுவரிதழ் முத்தமளித்தருளே ... ... ...*
முதுமறைபரவியகழனியில்வருகிளி முத்தமளித்தருளே ... (அ)

வேறு.

மருவிருக்குமலரடிக்கண் மனமிருக்குந்தவமுளார் ... ... ...*
மருவிநிற்குமுயிர்குடிக்கு மருளிருக்கும்வன்கணாய் ... ... ...*
முருகருக்குங்குவளைநற்செந் தொடைகலக்குந்திண்புயா ... ... ...*
முதுமறைச்சுட்பொருடெரிக்குங் கரமலர்க்குமுதல்வனே ... ...*
திருகறுத்திந்கெமையளிக்கு மொருசொல்கற்குஞ்சிறுகிளாய் ... ...*
திருவிருக்குநகர்களுக்குத் திலகமொத்திங்கிலகுமோர் ... ...*
தருவிருக்குங்கழனிமுத்தன் றருகமுத்தந்தருகவே ... ... ...*
சதுமறைக்கணொளிர்பதத்தன் றருகமுத்தந்தருகவே ... (கூ)

வேறு.

கருணையங்கடலெனவிளங்கிய கடவுடந்தருண்முத்தமே ... ...*
கழனியம்பதிதனில்விளைந்தருள் கன்னறந்தருண்முத்தமே ... ...*
யருணையங்கிரியெனவிளங்கிய வமலதந்தருண்முத்தமே ... ... ...*
யகமறும்படிவிரகுதந்தரு ளண்ணறந்தருண்முத்தமே ... ... ...*
யிருணையும்பரிசெமைவழங்கிய விறைவதந்தருண்முத்தமே ... ...*
யெழுபரஞ்சுடர்நிறைவுறும்படி யினிதுதந்தருண்முத்தமே ... ...*
சரணமுண்டகமுடிபொறித்திட வலவதந்தருண்முத்தமே ... ... ...*
தமர்கணெஞ்சிடைகுடிபுகுந்திடு தலைவதந்தருண்முத்தமே ... ... (ய)

முத்தப்பருவமுற்றிற்று.

## வருகைப்பருவம்.

திங்கண்முகமண்டலங்குறுவியர்வரும்புறச் சிறுநகைநிலாவெறிப்பத்... ...*
தென்முகமிருந்தரும்பொன்புரிகிடந்தநெடு செஞ்சடாடவிவிரித்துச் ... ...*
சங்கரிக்கிளையசிவசங்கரியெனும்பொலன் றண்கொடியுண்மகிழ்வுபூப்பச்... ...*
சபையிறொருபரமரகசியமடியர்காண்புறத் தனிநடனமிடுகடவுளு... ...*
மங்கருணைபொங்குமிருகண்களிதுளும்பவறி வானந்தநற்பவனிரு ... ...*
முண்டமுகமெங்கிழியதொண்டர்சிவசிவவென்ன வாதிபுலியூரில்வருவோய் ...*
கங்கைமுதனதிபரவுமதுநதிவிளங்குமொரு கழனிநகரிறைவருகவே... ...*
கருதளவிலரியசிவபதமுதவுமொருபெயர்க் கடவுணெடுமலைவருகவே ... (௧)

பாசடைநறுந்துழாய்த்தாமமணிமார்பனும் பதுமபீடத்திறைவனும் ... ...*
பணையுறநெடுங்கைவெண்குஞ்சரப்பிடரில்வரு பாகசாதனனுமற்றும்... ...*
தேசுடையநெஞ்சத்தபோதனர்களுமுனது செஞ்சிறடித்தொழும்பு... ...*
செய்தினுதிர்ந்தநுண்டுகள்கொடுநினைத்தவா சித்திவிளையாடிநிற்ப ... ...*
மாசடையவென்றவடியாருளமகிழ்ந்துதவு வண்மைதருமுண்பலிக்கே... ...*
வாயூறியங்கைமலரோந்திமணிநீர்நில வளைப்பிடையுலாவந்தவா ... ...*
காசுடையவெமதுமுத்தாபவழலிரியவரு கருணையங்கடல்வருகவே ... ...*
கருதளவிலரியசிவபதமுதவுமொருபெயர்க் கடவுணெடுமலைவருகவே ... (௨)

சதுமறைபுராணமிதிகாசமுடனுகமஞ் சாற்றுநெறியிற்றிறம்புந் ... ...*
தண்ணியர்களென்னினுமுள்ளன்பிலாதவர்க டாமெனினுமோனஞானப் ...*
பதமுறவிரும்புருநெஞ்சினர்களென்னினும் பலைமைவழியாலாயினும் ... ...*
பன்னுமொர்ருகாறனையுன்பெறுவரேலவர் படுந்துயரமெய்துழியெலாம் ...*
புதுமணிக்குயின்றமுடிவேந்தர்கள்வைக்களம் புக்குடையிழந்தமானப் ... ...*
புருஷார்க்கரமெனவிரைவிலங்கங்குவந்தருள் புரிந்துசுகமுதவும்வள்ளால் ...*
கதிர்பெருகுசிவபோகம்விளையுமடியார்ருள்க் கழனிநகரிறைவருகவே ... ...*
கருதளவிலரியசிவபதமுதவுமொருபெயர்க் கடவுணெடுமலைவருகவே ... (௩)

வேறு.

முத்தேவருக்கிவானந்தமுதலேவருகபெருங்கருணை ... ... ...*
முகிலேவருக்கும்பொருட்கு முன்னேன்வருகமன்றமூலக் ... ... ...*
கொத்தேவருகவசையில்குணக் குன்றேவருகதெள்ளமுதக்... ... ...*
குழம்பேவருகவருடருமெங் கோமான்வருகமுத்திவிளை ... ... ...*
வித்தேவருகசிவஞான விளக்கேவருகசுரர்பரவும் ... ... ... ...*
விமலாவருகவனைவருக்கும் விபுவேவருகவரியபர ... ... ... ...*
வத்தேவருககழனிநகர்வாழ்வேவருகவருகவே ... ... ... ... ...*
மறைகடுதிக்குமெமதிருகண் மணியேவருகவருகவே ... ... (௪)

கறங்கிற்சுழற்றும்பவக்கடலைக் கடத்தவருகபுலக்காட்டை... ... ...*
களையவருகமனப்பகையைக் கடியவருகதுகள்வழியிற் ... ... *
புறம்புற்றுலவும்பசுபோதம் போக்கவருகசிவஞான ... ... ...*
போதமணிச்செஞ்சுடர்த்தீபம் பொருத்தவருகபரம்பொருளைக் ... *
குறுமுட்கமலக்கரமணியிற் கூறவருகபரசீவர்... ... ... ...*
கூறற்றிருக்குமவுனநிலை கொடுக்கவருககொடுங்கூற்றின் ... ... *
மறம்பிற்படுக்குங்கழனிநகர் வாழ்வேவருகவருகவே ... ... ...*
மறைகடுதிக்குமெமதிருகண் மணியேவருகவருகவே ... ... (௫)

முடலையுடலம்யாமென்ன முயங்குகில்லமுத்திதரு ... ... ...*
முனிவர்குழாத்தைவிடுத்தொன்று முயலுகில்லனிலைப்பரிய ... *
நடலையுலகமெய்யென்ன நாடுகில்லமளப்பரிய ... ... ...*
ஞானனந்தசிவரூப நாமன்றென்னநவிலுகிலம் ... ... *
படலைத்துளபத்தொடையணியும் பதுமக்கண்ணன்முதற்கடவுட் ... ...*
பணியகில்லமிசைமுரலும் பசும்பொற்சிறையமதுகரஞ்சூழ் ... *
மடலைவனசத்தடங்கழனி வாழ்வேவருகவருகவே... ... ...*
வளருங்கருணைக்கடலமுத மதியேவருகவருகவே ... ... (௬)

ஆக்கையினையானெனல்விடுத லணிந்தவின்மாவியங்கழித்த ... ...*
லகிலங்கானற்புனலெனவே யறிதலதுவிங்கபிடேக ... ... *
னோக்கமுதலிந்தியமலரா றுவலுமகிழ்வேகமழ்சாந்த ... ... ...*
நடங்கும்பிராணனதூந்தூப நொய்மைமதியேசுடர்த்தீபந் ... *
தாக்குமுயிர்நைவேதனமாந் தாணுயிருத்தனமஸ்க்காரம்... ... ...*
தமியேமிதயமணிக்கோயி றனிலிவ்வாராதனைகொள்வான் ... *
வாக்குமனமுங்கடந்தசிந்தா மணியேவருகவருகவே ... ...*
வளருங்கருணைக்கடலமுத மதியேவருகவருகவே ... ... (௭)

வேறு.

வருகவெங்கடமாவியே வருகவெங்குலதீபமே... ... ... ...*
வருகதண்ணருண்மாரியே வருகசிற்சுகவாரியே ... ... *
வருககண்ணுகாமுதமே வருககேடறுசெல்வமே ... ... ...*
வருககற்பகதாருவே வருகசற்குணமேருவே ... ... *
வருகபாசவிநாசனே வருகஞானவினோதனே ... ... ...*
வருகதேசிகரத்நமே வருகவெண்மணிமுத்தமே ... ... *
வருகதென்கழனுபுரி வைகுதெய்வசிகாமணி ... ... ...*
வருகசோருணசல வள்ளலெங்குருராயனே... ... ... (௮)

வேறு.

அகிலமலகையிவரிரதமெனவுணர வறையுமொருகுரிசில்வருகவே... ...*
யறியுமுயிர்கள்புரியரவமெனவுணர வருளுமொருகடவுள்வருகவே... *
ககனவனசமெனவரனையறியுமொழி கழறுமொருகுரவன்வருகவே... ...*
கருதுநிரதிசயசுகநலுதவிதரு கமலசரணமுனிவருகவே ... *
யகமுமிதமுமெழுதுவிதமயலுமற வருளும்விழியினவன்வருகவே... ...*
யடியரிதயமலரதனினடனமிடு வமலசுகசொரூபன்வருகவே ... *
ககனசுரர்கள்வரமுனிவர்பரவுமொரு கழனிநகரிறைவன்வருகவே... ...*
கருணைமுகிலுலவுமருணையெனநிலவு கனககிரிவருகவருகவே. ... (௯)

வேறு.

அனகனசலனமலனதுல னமிர்தசொருபன்வருகவே... ... ...*
யகிலபுவனமுழுதுநொடியி லயிலும்விழியன்வருகவே... ... *
கனகமகரகுழையொடடியர் கவிகொள்செவியன்வருகவே ... ...*
கருதுமெமதுமுடியின்மகுட கமலசரணன்வருகவே ... ... *
பனகசயனன்முதலவமரர் பரவவரியன்வருகவே ... ... ...*
பகலுமிரவுமுருகுநயனர் பணியவெளியன்வருகவே ... ... *
மனதுளுதயசுகநலமுத மதியம்வருகவருகவே... ... ... ...*
மறைகள்பரவுகழனிநகரன் வருகவருகவருகவே... ... ... (௰)

வருகைப்பருவ முற்றிற்று.

## அம்புலிப்பருவம்.

செங்குமுதமலரவருவாயிவனுமன்பர்வாய்ச் செங்குமுதமலரவருவான்... ...*
றென்கமலமுகிழவருவாயிவனுமடியர்கைத் தென்கமலமுகிழவருவான் *
கங்குலிருளகலவருவாயிவனுமெமதகக் கங்குன்மலமகலவருவான் ... ...*
கரையில்கடல்பொங்கவருவாயிவனு மன்பெனுங்கரையில்கடல்பொங்கவருவா*
னங்கமுறுதாபந்தணிப்பையிவன்முத்தாப வழலைத்தணித்துவிடுவா ... *
னமிர்தருவமுடையைநீயிவனுமறிவானந்த வமிர்தருவமுடையனதனு ...*
லங்கலைகளுடையையெண்ணெண்கலைக்கதிபனுட னம்புலீயாடவாவே ... *
யருணகிரியெனநிலவுகருணைவிரிகடலுடனம்புலீயாடவாவே ... ...(௧)

புனலிடைப்பதிபலிதமாயிடுவையிவனுநற் புந்தியிற்பதிபலிக்கும் ... ...*
புவிநிழல்பொருந்திடுவைநீயிவனுமெதிரிடும் பொருணிழலினைப்பொருந்துங் *
கனமசைதறன்னிடைக்காட்டிடுவையிவனுமுக் கரணசலனங்காட்டுறும் ...*
கருதுதுகள்விழியினுக்கிருமையாகுவைமயற் கண்ணினர்க்கிவ்னிருமையாம் *
வனிதையர்களறுவருளமகிழவருவாய்பொறிகண் மனதுமிவன்மகிழவருவான் *
மருவுகுளிர்சாந்தமுளைநீயிவனுமறைமுடியின் மருவுமுபசாந்தமுடைய ...*
னனையவதனுனிகர்தியெமதுகுருராயனுட னம்புலீயாடவாவே ... *
யருணைகிரியெனநிலவுகருணைவிரிகடலுட னம்புலீயாடவாவே ...(௨)

ஒருகதிருதிக்கினொளிமட்குவாயிவனிரவி யொருகோடிவரினுமட்கா ... *
னுளவிருளகற்றவறியாயந்தவிருளையிவ னோரிமைப்பினிலகற்று... ...*
மொருதிசையிலுதயமுற்றிடுவையினடியவர்க ளுன்னுழியெலாமுதிப்ப... *
னொருதினமதிற்புரணைநீயிவனெநாளினு மோதுபரிபுரணனாவ... ...*
னுருவதுவளர்ந்துதேய்ந்திடுவையிவனெக்காலு மோர்படித்தெனவிருப்ப... *
னுனைநாடுமெவர்கண்மன்மதவிகாரப்படுவ வொழிவரிவனைக்கண்டபே ...*
ரரிய்வொருகடவுள்யாமெனுமகம்விடுத்திவனொ டம்புலீயாடவாவே ... *
யருணைகிரியெனநிலவுகருணைவீரிகடலுட னம்புலீயாடவாவே... (௩)

கமலனுதவுஞ்சனனமெய்துவையனுதியென் கையாலவற்புடைப்பன் ... *
கவிகையெனவங்கசன்கைப்படுவையவனைசிற் கண்ணலெரித்துவிடுவன் ...*
சமனுதவுமரணமெய்திடுவையிவனித்தியத் தாளாலவற்குதிப்பன் ... *
சஞ்சலமதுற்றிடுவைநீயிவனசஞ்சலத் தன்மையுளனுமிருப்பன்... ...*
விமலவிழியொன்றுல்விளங்கிடுவைநீயிவன் விளங்குஞ்சுயம்ப்ரகாசன் ... ...*
மேவுவைகளங்கநீகனவிலுமிவன்பெயர் விளம்புவர்களங்கமறியா... ...*
ரமலனிவனினையொருபொருட்டாயழைத்தலா லம்புலீயாடவாவே... ...*
யருணைகிரியெனநிலவுகருணைவிரிகடலுட னம்புலீயாடவாவே ... ... (௪)

இரவுபகலில்லாதபரவெளியுலாவலா மின்பசாகரமூழ்கலா... ... ...*
மென்நாளுமழிவிலமிர்துருவாயிருக்கலா மெழில்சுயஞ்சோதியுறலா ... ...*
மரிகரப்பிரமாதிவாழ்வுகடுரும்பென்ன வானந்தநாடாளலா ... ... ...*
மகமொடுபுறத்துறுகளங்கமறவென்றுளத் தாறுமுபசாந்தமுறலாம் ... ...*
சரவசரவுயிர்களுட்பூரணமதானசிவ சந்திரன்றானாகலாந் ... ... ...*
தானவர்கள்வானவர்கண்மானவர்கள்யாவருந் தாள்பணியவிறுமாக்கலா ...*
மருமறையினுட்பொருள்வழங்குமுதல்வள்ளலுட னம்புலீயாடவாவே ... ...*
யருணைகிரியெனநிலவுகருணைவிரிகடலுட னம்புலீயாடவாவே ... (௫)

வேறு.

புலவர்கள்புகழ்தருநீடொளிவீசிய புரணக்கலைதரவோ ... ... ...*
புகல்குருமனைமுலைதழுவக்குழைவுறு போதப்பகைதெறவோ... ...*
சலமுறுபவசலதிக்கரைகாணச் சரணப்புணைதரவோ ... ... ...*
தவமுனிவரர்முதல்யாவருமறிவரு தற்பதநிலைதரவோ ... ... ...*
யிலைமறைகாயென்வுறுமிவனொரு விஃதெனயாமறியே ... ... ...*
மிருவினைமாயைவலாணவமலமில ரியாவருமெதிர்நிற்ப ... ... ...*
மல்முறுமுனையிவன்வாவாவென்றனன் வாவம்புலிவாவே... ... ...*
மணியருணுசலகுருபரனருகே வாவம்புலிவாவே... ... ... (சு)

உனையொருகால்கொடுகுழையவரைத்திடு மொருவீரனைநல்கு... ... ...*
மொருமுதலவனிவனடிமலர்திலொழு குறுசிறுதுகள்கொண்டு ... ...*
தனிநிகருலகச்சராசரமுழுதுஞ் சம்மாரம்புரிதல்... ... ... ...*
சதுமறைநவிலுதல்குருமுகமாக விசாரித்திலைகொல்லோ ... ...*
முனநினைமயிர்முடியணிபவனும்விட முடியாவகமதியை ... ... ...*
மொழிபெயரொர்பெரிதரகுறுங்கைப்புரி முனிமுனிவதுமுன்ன ... ...*
மனமகிழ்வுறவிவனுடன்விளையாடிட வாவம்புலிவாவே ... ... ...*
மணியருணுசலகுருபரனருகே வாவம்புலிவாவே... ... ... (எ)

பதியிலியடைதருகதியிலியுறுகர பலியினனுடையில்லன் ... ... ...*
படுதலைசயனமதுறுபவனகமிலி படருலகதிலுண்மை ... ... ...*
மதியில்சுருதிசொல்விதியிலியெவரு மதிப்பிலியுன்மத்தன் ... ...*
மகவினொடுல்கைகளுறுநடையுடையவன் மருவுறுகுணமில்லன் ... ...*
றுதியிலியொருவர்சொலிகழ்விலியெனவெணி சும்முவிருந்துவிடேல் ... ...*
சுரரயனரிமுதல்வழிவழியடிமைசெய் தொண்டர்கள்கண்டிடுதி ... ...*
மதிதரவலனுடனீவிளையாடிட வாவம்புலிவாவே ... ... ... ...*
மணியருணுசலகுருபரனருகே வாவம்புலிவாவே ... ... (அ)

வேறு.

கதிரின்மண்டலமருவினன்குறு கலைமழுங்குவையிவனுற்றுங் ... ... ...*
கழனியம்பதிவரினிறைந்திடு கலைகளொன்றுவையெழிலுமா ... ...*
பதியிருஞ்சடைமுடியமர்ந்திடில் பனகமஞ்சுதல்புரிதரும் ... ... ...*
பழையமும்மலவரவமும்மிவன் பதமடைந்திடிலிரிதருந் ... ... ...*
துதிபெருஞ்சுரர்கணமடைந்திடில் சுதைகடைந்திடுகருவியாய்த் ... ...*
துவள்வையின்றிவனடியர்கண்ணுறின் சுகுணசந்திரனெனலவரு ... ...*
மதிகடந்திடுமிவனயந்தனன்வருகவம்புலிவருகவே ... ... ...*
வளருமெங்குருபரன்விரும்பினன் வருகவம்புலிவருகவே... ... (கூ)

புனகவம்புலிமுனிவரும்பர்கள் பனவர்கின்னரரிந்திரன் ... ... ...*
பதுமவங்கணன்கமலவங்கணன் பரசிவந்திருபுடையுறக் ... ...*
கனகமென்கொடியுளமகிழ்ந்திரு காமுழங்கிடவொளிமிகுங் ... ...*
கனசிதம்பரமதினடம்புரி கடவுளுந்திருமுகமலர்ந் ... ... *
தனகசின்மயசிவநிரஞ்சன வனுபரஞ்சுடரசலவா .. ... *
ளமலமுன்பெயரவைபுனைந்திட வதிசயம்பெறுமிவனகோ ... ...*
மனமகிழ்ந்துறவருகவென்றனன் வருகவம்புலிவருகவே ... ... *
வளருமெங்குருபரன்விரும்பினன் வருகவம்புலிவருகவே ... (௰)

அம்புலிப்பருவமுற்றிற்று.

## சிற்றிற்பருவம்.

ஒழியாதகக்கனெக்குநெக்கா வுருகிக்கசிந்திட்டசம்பூரு ... *
வுலகொளினுந்தனையொருகா லுன்னின்முமலச்சிறைகடிந்து ... *
வெழுவாரிதியுங்குலவரையு மிருவான்சுடருந்தாரகையு ... ...*
மிமையோரெவருமரக்கர்களு மிழிந்தவரவர்வேடமென ... *
விழியாயிரங்கொண்டவன்பதமும் விரிஞ்சன்பதமுஞ்சுடர்த்திகிரி... ...*
விளங்குந்தடக்கைப்புத்தேளின் மேலாம்பதமும்வீந்தறினு ... *
மழியாச்சுகவீடருள்புரியு மடிகேள்சிற்றிலழியேலே... ... ...*
யருணாசலசற்குருமணியே யடியேஞ்சிற்றிலழியேலே ... (௧)

மணிவார்சுணங்குபூத்தமுலை வடமீன்போலுமடந்தையரு ... ... ...*
மதவேளழகுமளகையர்கோன் வாழ்வுங்குமரன்போன்மகவுந் ... *
திணியார்தூண்செய்மணித்தோளார் தேவேந்திரன்றன்போகமதூஉந்... ...*
திரணீகரமாவுண்மதித்துத் தீரவகற்றித்துறந்தவராய்... ... *
பணியார்கடவுண்முதற்பதங்கள் பணியாதுளத்திலிறுமாக்கும் ... ...*
பரமமுனிவர்குழாமுருகிப் பணியப்பணியச்சிவப்பூறு ... ... *
மணியார்கமலத்திருவடியா லழியேல்சிற்றிலழியேலே ... ... ...*
யருணாசலசற்குருமணியே யடியேஞ்சிற்றிலழியேலே ... ... (௨)

படியேழ்பிலத்திற்பாவறையும் பலவானுடுமின்மணியெறிக்கும் ... ...*
பகருமயரோம்மாளிகையும் பரிதிமதிச்செஞ்சுடர்விளக்கும்... ... *
வடியாவுததிப்பொய்கைகளும் வடபூதரநற்சரக்கரையும் ... ...*
வானோரெனும்பொற்பாவைகளு மருவுபுவனம்பலகோடி... ... *
கடியாரிமைப்பிற்படைத்தளித்துக் காந்துமிருந்தபடியிருக்கும்... ... ...*
கவிஞர்சத்தித்திரள்சூழுங் கழனிநகரிற்பெருவாழ்வே ... ... *
யடியேமிழைப்பதனக்கிலக்கோ வதனாற்சிற்றிலழியேலே ... ...*
யருணாசலசற்குருமணியே யடியேஞ்சிற்றிலழியேலே ... ... (௩)

ஓதுநாலுமறைதருநூ லுணர்வைஞானமெனக்கருதி ... ... ...*
யுரைத்தற்கரியசுவானுபவ முடையார்போலும்பிறர்க்குரைக்கும் ... *
போதசூன்யசிகாமணிகள் பொருந்தும்வீட்டைப்பொருவுமென்றும்... ...*
புசலுமுலகிலுருநாமம் புதையச்சிதைக்கிற்காரணமாந் ... ... *
தீதிலாதபொருள்விளங்கத் தெரியுமெனக்காட்டுவன்போலுஞ் ... ...*
சிதைக்கின்வடுக்கண்மடவாரொன் செய்வேங்கோடிநமஸ்கார ... *
மாதிமூலப்பழம்பொருளே யடியேஞ்சிற்றிலழியேலே ... ... ...*
யருணாசலசற்குருமணியே யடியேஞ்சிற்றிலழியேலே ... ...(௪)

ஆராவமுதேசெழும்பாகே யாவித்துணையேகண்மணியே ... ... *
யடியாருளத்திலெழுந்தூறு மருளாநந்தத்தடங்கடலே ... ...*
பேராயிரங்களுடையானே பெம்மான்கழனியெம்மானே ... ... *
பிறவாதிறவாதொருபடித்தாய்ப் பிறங்கும்பதங்கடருவானே... ...*
வாராவரவாய்வந்தபெரு வாழ்வேவானோர்சிகாமணியே ... ... *
வளருங்கருணைமுதிதைமுதன் மடவார்விழியென்மதுகரஞ்சூழ் ...*
சீரார்கமலச்சேவடியாற் சிறியேஞ்சிற்றிற்சிதையேலே ... ... *
தேஜோமயவீடருள்குரவா சிறியேஞ்சிற்றிற்சிதையேலே ... (௫)

வேண்டற்கரியபரமபதம் விரும்பாதறினுங்கருணையினால் ... *
வேண்டிவேண்டியமுதூட்டு மெய்த்தாய்போலும்விளைந்தருளித் ...*
ஆண்டற்கரியவருண்ஞானச் சோதிவிளக்கந்தொழும்புசெயுந் ... *
தொண்டருளமாளிகைக்கேற்றுஞ் சொரூபானந்தச்சுடர்க்கொழுந்தே ...*
காண்டற்கரியதெனச்சமயங் கலுழிக்கலுழித்தலைவீங்கக் ... ... *
கார்சூன்முகில்செய்மணிவண்ணக் கடவுண்மனமுங்கலைமுடியுந் ... ...*
தீண்டற்கரியதிருத்தாளாற் சிறியேஞ்சிற்றிற்சிதையேலே ... ... *
தேஜோமயவீடருள்குரவா சிறியேஞ்சிற்றிற்சிதையேலே ... (சு)

அன்பர்வினையுமுயிர்ப்பகையு மல்லார்மலமுமவத்தைகளு ... ... *
மைந்துகோசப்பிணிவலையு மடங்காமனத்தின்விகாரமதூஉந் ... ...*
துன்பமுறுவெவ்வினைப்பவமுஞ் சுவர்க்கநரகத்துவட்சிகளுஞ்... ... *
சுருதிமொழியிற்சமுசயமுந் தொலையாதிருக்கும்விதிவிலக்கும்... ...*
வன்புபுரியுமகங்காரன் வாழும்பெருமாயாபுரமு... ... ... *
மறலிமுடியுமிஃதலவே வனசமலர்ச்செஞ்சீறடியாற் ... ...*
றெம்பினுடன்யாம்விளையாடுஞ் சிற்றிற்சிதையேல்சிதையேலே... ... *
தேஜோமயவீடருள்குரவா சிறியேஞ்சிற்றிற்சிதையேலே ... (எ)

கண்ணுயிரைக்கவரவல்ல கள்வனெனயாங்கழறுகிலங்... ... ...*
கருதுபோதம்பதைபதைக்கக் கடியுமறவனென்கிலஞ்சூழ் ... *
தண்ணார்புனன்முற்பூதத்திற் றட்டானெனுஞ்சொல்சாற்றுகிலந் ... ...*
தவமாமுனிவர்தமையெத்துஞ் சமர்த்தனெனச்சொல்கிலமடியார் ... *
மண்ணுமுடலந்தரத்தனையே வழங்கும்பித்தனெனப்புகலேம் ... ...*
வையப்பகுப்பிங்குணராவுன் மத்தனெனுமாற்றமதுனாயேந் ... *
திண்ணாணுவுக்கணுவான சிறுவாசிற்றிற்சிதையேலே ... ... ...*
தேஜோமயவீடருள்குரவா சிறியேஞ்சிற்றிற்சிதையேலே... ... (அ)

வேறு.

பிறியாதிருக்குமடியாரிழைத்த பிழைகோடிநெஞ்சினுணராப் ... ...*
பெருமானிறைந்தவொருவீடுநல்கு பெருஞானவாரியிருளா ... *
ரறியாமையொன்றுகுலவேர்களைந்த வடல்வீரனின்பசுகனு ... ...*
ராருளாளனந்தமதவேளைவென்ற வதிரூபனென்றுமழியான் ... ... *
மறைநாலுமெங்கண்மணவாளனென்று மணிவாய்மலர்ந்துமொழியும் ...*
வழிமாறிடாதவகையாகசெம்பொன் மலைபோலும்வந்தமணியே... *
சிறியேமிழைத்துவிளையாடுகின்ற சிறுவீடழித்துவிடலே ... ...*
திருவாய்ந்திலங்குமருணசலேச சிறுவீடழித்துவிடலே ... (கூ)

வேறு.

அருளேநின்பொன்னடிதொழுகோமறி வமுதேநின்பொன்னடிதொழுகோ *
மசலாநின்பொன்னடிதொழுகோமொளி ரமலாநின்பொன்னடிதொழுகோம் *
பொருளேநின்பொன்னடிதொழுகோம்பரி புரணாநின்பொன்னடிதொழுகோம் *
புனிதாநின்பொன்னடிதொழுகோமற் புதனேநின்பொன்னடிதொழுகோந் *
தெருளேநின்பொன்னடிதொழுகோம்பர சிவமேநின்பொன்னடிதொழுகோந் *
திருவேநின்பொன்னடிதொழுகோமுயர் செல்வாநின்பொன்னடிதொழுகோ *
மருவாநின்பொன்னடிதொழுகோமெம தடிகேள்சிற்றிலழியேலே ... *
யருணசலநின்னடிதொழுகோமுனதடியேஞ்சிற்றிலழியேலே... (ய)

சிற்றிற்பருவமுற்றிற்று.

## சிறுபறைப்பருவம்.

ஆண்பெணலி யாமுலகுதோன்றிநின்றழிதலா லாக்குமொருமுதல்வனுளனென் ... *
றறியாமலிந்த்ரதனுவைப்பொருவுதனுவையு மாற்றினறலாமிளமையும் *
விண்பரவுகந்தர்வநகரமனவாழ்வையு மிருசந்தையாமுறவையு ... ... *
மெய்யெனமதித்துண்டுறங்கிவாணாளெலாம் வீணிற்கழிக்குமுலகோர் ...*
மாண்பினொருகோடிமுகமன்சொலினு மீள்கிலாமறலியுயிராக்கவருவான் *
வருதல்பிழையாமலினியேனுமொருசாதக மருவியுய்ந்திடுமினென்னச் *
சேண்பரவுமடியர்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே ...*
சின்மயானந்தவருணாசலப்பரகுரவ சிறுபறைமுழக்கியருளே ... (க)

எரியுமுழனரியுமன்னியரும்விறன்மறலியு மேங்கித்திகைத்துநிற்ப ... ...*
யாக்கைகைப்பொருளாவிமூன்றுங்குருப்பிரா னிணையடியிலிரவிமுன்னாக் *
கரியெனவளித்துவருமேவல்புரிபாவவன் கருணைப்ரவாகமூறுங் ... ...*
கடாட்சமதனாலெய்துதத்வஞானத்தலது கற்பமொருகோடியாகச் *
சரியைகிரியாயோகசாதனமுஞற்றினுஞ் சச்சிதானந்தசுத்த ... ...*
சைதன்யமாயிலகுவீடுபெறலரிதெனச் சாந்தகுணமெய்த்தவர்களாற் *
திரிபுவனமுழுதும்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே *
சின்மயானந்தவருணாசலப்பரகுரவ சிறுபறைமுழக்கியருளே ... (உ)

முத்தொழிறனக்குரியவானவர்க்குமாதி மூலமேமௌனஞான... ... *
மூர்த்திவடிவாகிவடவாலடியிலெந்தைசின் முத்திரையினாலுணர்த்தும் *
வத்துவினைநல்காதுநல்கிடப்பெற்றுவாய் மௌனமுறநிலைநின்றிடு... ...*
மாதவர்களலதிரண்டொன்றென்றுதர்க்கமிடு வாய்வாதரோயவொல்லா *
மெத்தனைவிவேகசம்பன்னரவராயினு மின்பசாகரமூழ்கிடா ... ...*
ரில்லாதமாயைதருசனனவாரிக்கரை யிவர்ந்திடாரொன்றுமிதுவே ... *
சித்தமெனவடியர்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே ...*
சின்மயானந்தவருணாசலப்பரகுரவ சிறுபறைமுழக்கியருளே. .. (௩)

ஐவகைபெறும்பூதமைந்துபுலனிந்திரிய மைந்தொடைந்துட்கரணநான் ...*
கானவிவையாவுமொருபொருளல்லவென்றுமு னாற்றிப்ரகாசவடிவாய்ச் *
செய்வகைமிலாதனாயாவையுஞ்செய்வதாய்ச் சிற்சதானந்தசிவமாய்த் ...*
திகழ்பரம்பொருளினையுணர்ந்தஃதுதானெனுந் திட்பமுற்றவையாவையுங் *
கைவலநிரஞ்சனநிராமயவியோமவ விகாரமாந்தானென்னவே... ... ...*
கண்டுபரமானந்தவெள்ளங்குடைந்திடுதல் கனஞானமார்க்கமென்னத் *
தெய்வவடியார்கள்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே ...*
சின்மயானந்தவருணாசலப்பரகுரவ சிறுமறைமுழக்கியருளே ... (௪)

கலைபலவுணர்ந்துகமழ்குங்குமமெடுத்துலவு கரமுறழின்றிடேன்மின்... ...*
கன்மமெனுமளறுநிறைபடுகுழியின்முக்கடக் களிறெனவிழுந்திடேன்மின் *
புலையுடலம்யாமெனமதித்திடேன்மின்வரும் போகமெமதென்றிடேன்மின் *
பொருளல்லவற்றினைப்பொருளாமதித்துப் புலம்பித்திரிந்திடேன்மின் ...*
விலைமுலைமடந்தையர்களாலரவின்வாயுற்ற மென்றவளையாயிடேன்மின்... *
விரைவில்குருவைச்சரணமடைமினடைமினென்னுமேலுலகர்செவிபுதைப்பத்
தில்லைநகரிலடியர்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே ...*
சின்மயானந்தவருணாசலப்பரகுரவ சிறுபறைமுழக்கியருளே ... (ரு)

அகிலமுழுதுங்கனவுகானனீர்கந்தர்வ வணிநகரமிந்த்ரசால ... ... *
மற்றெனவுமமலசிவசொரூபமேயாமெனவு மனுபூதியிற்பெற்றனம் ...*
பகலிரவுமறிவொடறியாமையும்விகாரமும் பற்றறப்பெற்றுநின்றேம்... ...*
பார்முழுதுமடைவுறவிரும்புபரிபூரணப் பரமபதம்யாமாயினேஞ் ... *
சுகமுறுகணசைவெகுளியிருவினைகண்முன்வருந் தொந்தவேளைக்களைந்தேஞ் ...*
சுருதியையெடுத்தெறிந்தேம்யாதுமஞ்சுறேந் துய்யகுருவருளாலெனுச் *
செகமுழுதுமடியர்வாய்ப்பறையதறைவித்தவா சிறுபறைமுழக்கியருளே ...*
சின்மயானந்தவருணசலப்பரகுரவ சிறுபறைமுழக்கியருளே ... (சு)

வேறு.

எழுமரகதவியறுரகமதணிதரு மிரதமிசைப்பொலியு ... ... *
மிரவிகளளவிலமானவெழுந்தக விருளதனைப்பருகி ... ... *
யொழிவறவமுதுருகலைநிறைமதியம தோராயிரமென்ன ... ... ...*
வுதயமதுற்றறிவானந்தந்தனை யோவாதகனுதவி... ... ... *
யழகுறுபுவனசராசரமுழுது மகண்டாகாரமதா... ... ... ...*
யமர்தருசிவசொருபந்திகழ்வுறவணி யருணிறைமலர்விழியான் ... *
மொழிவறுமொழிதனைமொழிதருகுரவ முழக்குகசிறுபறையே ... ...*
முனிவர்கடொழுமருணசலமகிப முழக்குகசிறுபறையே.... ...(எ)

மானவரவதுருகமகற்புணர் வுற்றனளெனுமாற்ற ... ... *
மலடுறுமெழின்மடவரலினையென்செயு மழையினமவைகூடிப் ... *
பானுவையென்செயுமலைபலகூடிப் பரவையையென்செய்யும் ... ...*
பகலிரவகல்வுறுவானினையாதிகல் பண்ணுறுமாதலினுன் ... ... *
ஞானதிவாகரன்மோனசுகோதய னுடிசதானந்த ... ... ...*
னுனெனவதிதிடமாயெதுமாயையி னண்ணிடினும்முள்ளக் ... *
கூன்றறில்லெனவோர்மொழியருள்பவ கொட்டுகசிறுபறையே ... ...*
குலமறைபரவருணசலகுருபர கொட்டுகசிறுபறையே.... ... (அ)

வேறு.

இரவியொடுமயக்காந்த விருஞ்சிலையும்போல ... ... *
வியற்றுதலுமேவுதலு மில்லாமலிருப்பத் ... ... ... *
தரவுலகுங்கருந்தாதுஞ் சலித்திடுதல்போலச்... ... ... ...*
சச்சிதானந்தசிவ தன்மயமாநின்முன் ... ... ... *
கருவியெனுங்கரணமவை கம்பிக்குமந்தக் ... ... ... ...*
கன்மநினக்கில்லையொரு காலதினுமென்றே... ... ... *
யருள்புரியுமொருகுரவ வறைகசிறுபறையே... ... ... ...*
யருணகிரிப்பெருமானே யறைகசிறுபறையே... ... ... (கூ)

துன்னுமுருப்பெயர்மாயை சுட்டறிவுசிவன் ... ... *
றுலக்குவித்தல்பரிசமாத் தோற்றுவித்தல்வித்தைப் ... ...*
பன்னுமிதமகிதமெனப் பண்ணுவித்தல்கன்மம் ... ... *
பகருமிந்தவைம்பொருளும் பரஞ்சுடராயெறிக்குந் ... ... *
தன்னினைவிலுண்டாகிச் சமித்திடுமிங்கதனுற் ... ... ...*
சர்வபரிபூரணமாந் தற்பரநீயென்றே ... ... ... *
யன்னையெனவருள்குரவ வறைகசிறுபறையே... ... ... ...*
யருணகிரிப்பெருமானே யறைகசிறுபறையே ... ... (ய)

சிறுபறைப்பருவமுற்றிற்று.

## சிறுதேர்ப்பருவம்.

மகரதுவசங்கலையசந்த்ரவட்டக்கவிகை வாரிமுரசங்குயிலெனும் ... *
வாய்விருதலிருள்யானைதென்றலிரதங்கன்னல் வார்சிலைமலர்க்கைவாளி *
முகமிலகுவீசையில்பதாதிசுகவாம்பரி முதற்கொடுவலாரிதிண்டோண் ...*
முரகரிபுராரிமுதல்வானவரைவெற்றிகொளு மூரிமதவேளைநெஞ்சிற் *
பகரமுறுபொருள்களிற்பைம்மறிக்கின்றவொரு பார்வையயிலிற்குமைத்துப் *
பரிபூரணனந்தவிரதங்கடாவிபர ஞானசெஞ்சுடரொறிக்குந் ... *
திகிரிதிரிபுவனமுழுதுஞ்செலவுருட்டுவோய் சிறுதேருருட்டியருளே ...*
சேணிற்குமாரருணைமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே... (க)

உண்மையறிவானந்தமெய்ப்பொருளதொன்றெனி லுலகமேதென்றுவரிலோ ...*
வோதுபுரியரவமெனநின்றிலகுமாயின துணர்ந்தபின்னுரகமிலையா... *
லெண்மைதருமுலகவணமேகாதிருப்பதெனை யென்றிடிற்கழுதாழிநீ ...*
ரிலையெனவுணர்ந்துமதுதோன்றல்போ லுலகமு மிலங்கலுறுமவணமன்றித் *
தண்மையுறுமுலகநானாவிதமதாயேக சத்தில்வரலெனையென்றிடிற்... ...*
றமணியத்திடைவந்தகற்பிதாபரணந் தயங்கல்போலிலகுமென்னாத் *
திண்மையாவுணர்தியெனவருள்புரியுமொருகுரவ சிறுதேருருட்டியருளே ...*
சேணிற்குமாரருணைமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (உ)

ஒருவனாற்பொன்பணியதாமுணர்வுமேவனா லுலகாய்விரிந்ததென்னி ...*
லுயர்விணிற்பீலியும்வெயிற்குஞ்சமும்போல வொக்குமவைபலவாயினு *
முருவமொன்றுருகுமிதுபலவுருவமாவதெனை யோவெனிற்கந்தருவமா... ...*
வொண்ணகரமானுமதில்விவகாரமொன்றுமிலை யுறுவதிதிலெனையென்றிடின்*
மருவிவருகனவுபோற்காண்டியதுநனவினது வாசனைகளங்கமற்ற ... *
வத்துவிற்கேதெனிலகண்டசுகபோதத்தில் வந்தநினைவாகுமென்னாத் *
திருகறவுளத்துணர்தியெனவெனக்கருள்குரவ சிறுதேருருட்டியருளே... ...*
சேணிற்குமாரருணைமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (ங)

ஆதிநடுமுடிவிலாப்பொருளினிடைநினைவுமுண் டாங்கொலோவெனிலதற்கோ *
ரானந்தலீலையிதைமித்தையெனவுன்னும லமைதியொடுகேட்டியுள்ளஞ் ...*
சாதமுற்றனுவளவசைந்திடிற்பரமொடுயிர் சகமதுண்டாகுமுள்ளஞ் ... *
சற்றேனுமசையாவிடத்தின்முப்பொருளுஞ் சமித்துமெய்ப்பொருளாகுமா...*
லீதெனவுமுன்னினைவையூகமாநோக்குழியி லெதிரிட்டநாமவுருவா... ...*
யிலகுமனைநொடியினிற்கோடிநினைவாதலா லிந்தவுலகுருநாமமாய்த் *
தீதிலாதிலகுமிஃதுணர்தியெனவருள்குரவ சிறுதேருருட்டியருளே. ... *
சேணிற்குமாரருணைமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே... (ச)

தன்னிலெழுநினைவைத்துணித்தால்விளங்குறுஞ் சச்சிதானந்தமதனாற் ... *
சங்கற்பமேயுலகமுலகேசங்கற்பமாச் சாற்றலாநினைவையன்றி... *
முன்னுலகமொன்றிலைச்சாத்தனுறைகோவிலின் முன்னர்சதுரங்கமாக... ...*
மொய்த்திடுபதாதிகஜதுரகமிரதமமென மொழிந்தவையினுமவுருவ *
மன்னியமுறப்புரியின்முக்காலுமண்ணதே யாகுமற்றவைகளெல்லா... ...*
மசத்தியமதாகுமாங்குலகிலுருநாமம தகற்றிடிலகண்டமாகுஞ் ... *
சின்மயமதேயிலகுமென்றெனக்கருள்குரவ சிறுதேருருட்டியருளே... ..;*
சேணிற்குமாரருணைமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (ரு)

ஆர்கலியினுரைதிவலேகுமிழிதிரைபாதியுண் டாயினுமவற்றினும ... ...*
மானவுருவம்பொய்ம்மைகுளிரிளகலிரதமய மானபூம்புனன்மெய்ம்மைபோற்
கார்கலிநிறைந்தவுலகத்திலுருநாமங்கள் கபடமாயாகாரியங் ... ...*
கருதரியசச்சிதானந்தமயமாநிருவி காரசிவமேமெய்ம்மையா ... *
மோர்கெழுமிநிலேமறையின்முடியிலுபநிட தங்க ளியாவுமொருமுகமதாய்நின் ...*
றெக்காலுமோதுவதெனக்கருதியுள்ளத்தி லெழுகின்றவையமெல்லாந் *
தீர்கெனவருட்கண்பணித்தருளுமெய்க்குரவ சிறுதேருருட்டியருளே... ...*
சேணிற்குமாரருணேமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (௬)

தவருதவாய்மைமறைநான்கிற்சிறந்ததாஞ் சாமமறையந்தமறையிற் ... *
சாந்தோக்யவுபநிடதமோதுமாவாக்கியந் தத்வமசியாருமதனேத் ...*
தவராஜரோத்துசற்குரவனுலோர்ந்துமுத் தனுவாதிவாச்சியத்தைத் ... *
தள்ளுதலிரோசசமகண்டபரிபூரணச் சச்சிதானந்தசிவமா ... ...*
மவிரோதலக்ஷியப்பொருள்கோடல்பூரகம தாகுமெக்காலுமதுவா ... *
யமைவுறுதல்கும்பகமதாகுமிதுசெய்தியே லமிர்தமயமாவையென்றிச் ...*
சிவராஜயோகமெற்கருள்புரியுமொருகுரவசிறுதேருருட்டியருளே ... *
சேணிற்குமாரருணேமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே... (௭)

கற்பமுங்கணமுமாயவைமின்றென்றல்லவாங் காலதத்துவமென்னவுங் ...*
கடவானுமடவானுமாகியவையல்லவாங் ககனதத்துவமென்னவு ... *
மற்பொலிவிளக்குதிவட்டியாயல்லவாம் வன்னிதத்துவமென்னவு... ...*
மறிதிரைக்கடலாகிதடமாகியல்லவாம் வண்புனற்றத்வமெனவு ... *
மற்பவுபிராகிமஹாதிசனுயல்லவா யவிரோதமாயிலங்கு ... ...*
மத்துவிதவத்துவாய்த்தத்துவசொரூபமா யானந்தபோதமயமாஞ்... *
சிற்பரமதாகுமெனேயென்றனக்கருள்குரவ சிறுதேருருட்டியருளே... ...*
சேணிற்குமாரருணேமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (௮)

வடகைலேயோங்கலிற்றென்முகமிருத்தலான் மதனேப்பொடித்தவிழியோன் *
மாசற்றதக்ஷிணுமூர்த்தியாந்தென்பொதிகை வதிதலிற்கும்பமுனியு ...*
மிடமருவுதக்ஷிணுமூர்த்தியாமிருவரு மியம்புதக்ஷிணமகற்றி... ... *
யெழில்வேதவுத்ரகாண்டம்மருவலுறுகின்ற வெல்லேயிலவர்க்கெதிர்ந்து ...*
திடஞானமருள்செயுஞ்சிவசுப்ரமண்யமே தக்ஷிணுமூர்த்தியாமச் ... *
சிவசுப்ரமண்யமென்பேருக்கிலக்கியச் செம்பொருளதாயிருக்கச் ...*
செடமருவுமடமையேற்கருள்புரியுமொருகுரவ சிறுதேருருட்டியருளே ...*
சேணிற்குமாரருணேமாணிக்கமேருவே சிறுதேருருட்டியருளே ... (௯)

தண்ணருட்கடன்மடையிதென்விழியினுற்புனித சத்வப்ரதானமனதாற் *
சதுமறைகளோலிடும்பாததாமரையினுற் றைவருமலர்க்கையினு... ...*
லெண்ணரியகைவல்யவுபநிடதநாலினு லேகசிவயோகமதனு... ... *
லின்னமுதவாக்கினுன்மும்மலச்சிறையகல வென்கருத்தைத்திருத்திக் *
கண்ணகனிலத்தொருக்காலுமழியாமையாற் காதுநனவாதியாவுங்... ...*
காண்கையான்மிகுபிரியவிடயமாயுறுதலாற் கனசச்சிதானந்தமாந் *
திண்ணகம்ப்ரம்மாஸ்மியென்னவெனேயாள்குரவ சிறுதேருருட்டியருளே ...*
சிவசுப்ரமண்யனென்றேசிகசிரோமணீ சிறுதேருருட்டியருளே. (௰)

சிறுதேர்ப்பருவமுற்றிற்று.

கழனிவாசல் திருவருணசலதேசிக

ரத்நப்பிள்ளேத்தமிழ்முற்றிற்று.

ஸ்ரீமீனாம்பிகாயநம:

இந்து.

சாயக்கோட்டையென்னும்

# அழகாபுரி உமையவ

# ளானந்தப்பிள்ளைத்தமிழ்.

சுந்தரேஸ்வராயநம:

### விநாயகர்ஸ்துதி.

அம்பொன்மணி மகுடமுடியமராவதித்தலைவ னல்விமலரம்போருக ... ...*
னம்புயமலர்க்கணரி செம்பொன்மலைவில்லாளி யருமறைகணுலுவல்லோ...*
ரும்பர்நாருரகர்விக்கினமொழிவுறப்புரிந் துதவுமருள்வெள்ளமதமா ... ...*
வொழுகுறச்சந்தரகோடிப்பிரபைவீசவரு மும்பன்முகனைத்தொழுதுமால் ...*
தும்பிமுரலளகபாரப்புலோமசைமதிச் சுந்தரானனநாமக ... ...*
டுங்கநற்பூமாதுமுனிவர்பன்னியொழிற் சுரநரமடந்தைநல்லா ... ...*
ரம்புவிழியரவமடமங்கையர்களேனைப்பிறைத் தன்புசெயவருண்மங்கலை ...*
யானைநகரனையவழகாபுரியுவந்தவுமை யம்மைசொற்றமிழ்தழையவே. (க)

## காப்புப்பருவம்.

### விஷ்ணுஸ்துதி.

கார்கொண்டமலரளகபாரமுஞ்சோடச கலாமதிநிகர்த்தமுகமுங் ... ...*
கருணையங்கடலூறுகண்களும்மதனவேள் கைச்சிலையெனும்புருவமுந் ...*
தார்கொண்டவிருகுயமுமபயவரதந்தரும் தண்கரமுமின்னலிடையுந் ...*
தாட்கமலமுங்கொடெனதிதயபீடிகைமருவு தையலுமையைப்புரக்கு ...*
மேர்கொண்டகோபியர்களதரபானங்குடித் தெழில்விஜயனிரதவனாமே ...*
லேறியெதிரொன்னலக்கட்செவிகளஞ்சுவா னிகல்வளைத்தொனிமுழக்கி ...*
நேர்கொண்டசரமாரிபெய்தைவர்குலமான நெற்பயிர்தழைப்பமுன்ன ... ...*
நின்றுகாத்தருணறியபைந்துளபமாலையணி நீலப்பசுங்கொண்டலே (உ)

### சதாசிவஸ்துதி.

அமுதநிலவுமிழ்மதியமணியர வணியமிளிர்தருசெஞ்சடைக்காட்டின ... ...*
ரமராயனரிமுனிவரருமறை யறியவரிதெனும்விஞ்சையுட்சாட்டின ...*
ரமலநிறைசுகநறவமுமிழ்தரு மணியமலரடியென்முடிச்சூட்டின ... ...*
ரழலினிழுதெனமனதுளுருகுறு மடியரினமுறவென்றனைச்கூட்டினர் ...*
கமலமலர்வயல்புகலிவருசிறு கனவிகெளணியஞெண்டமிழ்ப்பாட்டினர் ...*
கருதுமடியவரிதயமலருறு கருணைவிழியெதிர்நின்றசிற்காட்சியர் ...*
கதிருமதிசுடரளவிலெனமிகு கவினுமெனதுளமொன்றுதற்சாட்சியர்... ...*
கனகசபையிடைநடனமிடுகமிழ் கமலமலரடிநெஞ்சம்வைத்தேத்துதுங் ...*

குமுதமளிமுரல்குவளைதளவணி குமிழமிலகியபங்கயப்பூத்திகழ் ... ...*
கொடியதெனமலையனாயனிடைவரு குமரிதிரிபுரசுந்தரப்பாற்பதி ...*
குலவுமணியகடுளைதலறவொருகுகனைமுதல்வரு பன்மகப்பூத்தவள் ... ...*
குழையொடமர்புரிமகரவிழிகொடு கொடியமலவிருணைந்துறப்பார்த்தவ ...*
ளமரருததியைமதனமதுசெயுமளவிலெழுவிட முண்டவற்காத்தவ ... ...*
ளலையில்வளைதருதரளமணிவட மலையுமலைமுலையம்பிகைச்சீர்ப்பொலி ...*
யரியபலவளமதுரையணிநக ரரசிமுலையமுதுண்டகத்தேக்கின ... ...*
ளமலையழகியகௌரியெனைவழியடிமைகொளுமுமையம்மையைக்காக்கவே. ()

விநாயகர்ஸ்துதி.

கழைமதனுருவைப்பொடிசெயுமனலக் கண்ணுதறன்னடியில் ... ...*
விழைவொடுபணியத்திருவருள்பொழியும் விழியுமையினையருள்க... ...*
புழைதருமங்கைச்சினமுறுவிழிகிம் புரியணியொருகொம்பொண் ... ...*
டழைவிரிசெவிமுக்கடதடகும்பத் தந்திமுகத்தரசே- ... ... (ச)

சுப்பிரமணியர்ஸ்துதி.

ஆறுதலைப்பரமேசனளித்திடு மாறுதலைப்பெருமா ... ... ... ...*
ளாழ்கடலிற்றுயினரணனுக்குமி ராமருகப்பெருமா ... ... ...*
ளாரணனைச்சிறைமேவநிறுத்திய வாதிமலைப்பெருமா ... ... ...*
ளாடகநற்கிரிராஜபௌத்திர ஞமுருகப்பெருமாள் ... ... ...*
வீறுதலைக்கவிவாணனிருட்சிறை வீடியநற்பெருமாள் ... ... ...*
வீசுதமிழ்ப்பொதிகாசலனுக்கருள் வேதகசிற்பெருமாண் ... ... ...*
மீதலமுற்றடுசூரனுரத்தயில் வேல்விடடற்பெருமாள் ... ... ...*
வேதமுடித்தலையாடுமலர்ப்பத மேவுசிரத்தணிவாம் ... ... ...*
வேறுதலைப்படுமாறுமதத்தவர் மேவுமதற்கரியாள் ... ... ... ...*
வீடுவிருப்பொடுதேடுமுளத்தவர் மேவுமதற்கெளியாள் ... ... ...*
வீசுதிரைக்கடலாடையுடுத்திடு மேதினியிற்பெரியாண் ... ... ...*
மேதிமுகத்தவனுவிகுடித்தடல் வீறியசிற்பரையாண் ... ... ...*
மாறுதலைப்பவவாரிகடத்திடு வாரிசநற்புணையாண்... ... ... ...*
மாதவருக்கமாறுதலைச்செயும் வானமுதச்சிலையாண் ... ... ...*
மாமணிவைத்தொளிர் கோபுரமொய்த்திடு மாவழகைப்பதியாண் ... ...*
மாமறையுட்பொருளாகியபெண்ணுமை மானையளித்துறவே... ... (ரு)

விபூதிஸ்துதி.

ஆதிபராபரை மீனவிலோசனி யானமனோகரியை ... ... ...*
யாடகமாமலை ராஜகுமாரி கிர்பாகரநாயகியை ... ... ...*
யாரணிவாரிசநாரணிபூஜித வாரமுதானவளை ... ... ... ...*
யாரளகாபுரிமானழகாபுரி யாளுமனோன்மணியை... ... ... ...*
மாதரசாழிமுராரிசகோதரி மால்விடையானிடமார் ... ... ...*
வாலைபவானிநகாயுதவாகினி வார்ஜகன்மோகினியை ... ... ...*
வானவர்மானிடராதுலர்மீதுறு மாகருணைநிதியை ... ... ...*
மாதுமையாளைசுகோதயவாழ்வினை மாவருளேசெயுமான் ... ... ...*
மாதவமேலவராகியதேவ விமானமதேறிநெடு ... ... ...*
மால்வடமேருசராசனம்வாசுகி மாசுணநாணிதிரு ... ... ...*

மால்விடுவாளியெனுவருவார்கலை மானிடன்மூவிதமார் ... ... ...*
வாசமுலாவியமூவர்கெடாதுறு மாறடுமாரழல்வாய் ... ... ...*
வாதையிலாவிளைவாகிவிசாலிய வாரிதியூடெழுமோர் ... ... ... ...*
வானமுதாகிபுலோகவஜீகர மாகிமனோரதமாய்... ... ...*
மாயைஜெயாகரமாகிசுபாகர மாகிசிவாகரமாய்... ... ... ...*
மாமறையோரனுபூதியதாயொளிர் மானவிபூதியதே ... ... (௬)

உருத்ராட்சஸ்துதி.

திதிதருபுத்திரிகலைவிளைத்தொரு சிறையிடைவைத்தறவே... ... ...*
தெளிவுறுமச்சுரரரகரதற்பர சிவசிவநிற்கபயங் ... ... ... ...*
கதியுளம்வைத்தருளெனமுறையிட்டிடு கணமொருருத்திரனார் ... ... ...*
கருதியுகுத்திடுதாளமுருத்திடு கணமணியைத்தொழுவாம் ... ... ...*
மதியமுகுத்திடுமமுதைநிகர்த்தெழு மழலைமொழிக்கிளியை ... ... ...*
மலர்தலைவைப்பிடையெழினடைகற்றுறு மடவனப்பெடையை ... ...*
யதிசயமுற்றொருவனசமடக்கொடி யமர்வுறுபொற்பிணையை ... ... ...*
யகிலஜகத்திரளுதவுமையைப்புற மருளொடளித்துறவே ... ... (௭)

திருமந்திரஸ்துதி.

திருவார்மங்கலையெமையாளம்பிகை தெளிவாரின்னமுதஞ் ... ... ... *
சிறையார்வண்டினமுரலாநின்றிடு செறிவார்பைம்பொழில்வாய் ... ...*
மருவாநின்றிடுமயிலாமென்றெதிர் வருமாசுந்தரியை ... ... ...*
மதியாமென்றொளிர்முகமார்பெண்ணுமை மகிழ்வாய்நின்றருளுந் ... ...*
தெருளாரும்பலமறையோதும்பசு சிவமாகும்பொருளே ... ... *
சிவமாகும்பொருள்பசுவேயென்றொரு தெளிவேதந்தெழுபே... ...*
ரருளானந்தமதுதவாநின்றெம தகமாமம்புயமே ... ... ... *
லணையாநின்றிடுமனமாமென்றுல வஜபாமந்திரமே ... ... (௮)

இலட்சுமிஸ்துதி.

முயலுமருந்தவரகமதுகும்படி முடிகள்வணங்குறுமோர் ... ... *
முதுகுருவென்பவனகலமுறும்படி முகைமுலையின்குறியு ... *
மியலுறுசெங்கரவளைகடழும்பரு மிறுகவணைந்திடமா ... ... *
மெழிலுறுமின்கொடியுமையெனுநங்கையை யினிதுபுரந்திடுமா... ...*
னயமுறுசெஞ்சரணயன்வருமுந்திய னலமுதவுங்கரமா ... ... *
னகைமுகமங்கனியிதழிருகண்ணெனு நளினமலர்ந்திடுமோர்... ...*
வயலெனநின்றவனிருதயபங்கய மலரில்வதிந்துலகோர் ... ... *
மனநினைவின்படிநிறைசுகமுந்தரு வனசமடந்தையரோ... ... (௯)

சரஸ்வதிஸ்துதி.

வடமலைமிசைவடதருவடியிடையரு மறைநெறியருள்குரவன் ... *
மயறருவிரகமெனுததியிலலமரு மளவினில்வடமுலையாங் ... ... *
குடமுதவுறுமருளுமையினைகௌரியை குமரியைபுவனியிலைக் ... *
குலமதிமரபுறுகௌரியனுதவிய குழவியையருள்புரிக ... ... *
மடலவிழ்சததளமுளரியிலுறைதரு மறையவன்முகமலரில் ... *
வதிதருமுவலகலுருவினைபுகழ்ஜப மணிவடநிறைகலசம் ... ...*
மடமறுமருடருகுறியணிநிகமமு மருவியகரமலராய் ... ... *
மகிழ்தருகுறுநகைநிலவுமிழ்திருமுக மதிநிறைகலைமகளே ... (௰)

பலதேவர்ஸ்துதி.

தவளமதாசலநடவியுலாவரு தருணசுராதிபனுங் ... ... *
தவளசரோருகனமரகணதிபர் சதுரதபோதனரும்... ... ...*
திவளுதிவாகரரமுதநிலாமதி திசைமருபாலர்களுந் ... ... *
செழுமுகமாதர்களெழுவராயாதியர் திருவருளேபுரிவார் ... ... *
பவளஜடாதரனொருபுறமார்தரு பரமகல்யாணியினைப் ... ... *
பரசிவகாமியைபுசழபிராமியை பகவதிவாலையினைக் ... ... *
குவளைவிலோசனமகளிர்சிரோமணி குளிர்முசமாதுமையைக் ... *
குருகருணைநிதிமருவழகாபுரி குலவுகுமாரியையே- ... (௰௧)

காப்புப்பருவமுற்றிற்று.

---

# செங்கீரைப்பருவம்.

தகரக்கருங்குழற்றரளநகைமேனையாந் தையலுமெடுத்தணைத்துத் ... *
தன்கணைக்காலிற்கிடத்திநீராட்டிநற் சந்த்ரகாந்தத்துகிலினுற்... ...*
புகன்மேனியொற்றிட்டுவொண்ணறும்புகையிட்டு பொற்சுண்ணமுச்சியிட்டுப் *
பூதியிட்டகனிலப்பொட்டிட்டுமார்பிடைப் புலிநகமதாணியிட்டு ... *
மகரவிழிமையிட்டுமஞ்சணீராலத்தி மறுகிடைச்சுற்றிவிட்டு ... *
மடிவைத்துமுத்தாடிமணிவாய்மடுத்தூண்ண வார்கடிக்குங்குமந்தோய் *
சிகரமுலைபமுதம்புகட்டவளருங்குழவி செங்கீரையாடியருளே ... *
சிவைகௌரியுமையருட்செல்வமரகதவல்லி செங்கீரையாடியருளே ... (௧)

கொள்ளுமணிமுத்தரிச்செஞ்சிலம்பணிகரக் கொஞ்சுறுசதங்கைசெங்கோற் ...*
கொலுசணைவடஞ்செறியுமாடகச்சூடகங் குலவுமணிவாகுவலய ... *
மொள்ளியசரப்பளிபதக்கமொடிரத்நமுக் குத்திமாழைக்குதம்பை ... ...*
யொளிவிடுங்கொப்பொடரத்நமணிசுட்டிமுடி யுச்சியம்பணிதிருத்தி *
யுள்ளிரும்பூதன்னையெய்தநீட்டிச்சரண மொன்றையொருதாண்மடித்தே ...*
யூன்றியிருகரமலர்கண்மேற்றலையெடுத்தரு ளருந்தவிழிநோக்கிமுறுவற் *
றெள்ளமுதம்வீசுங்கலாமதிமுகத்தம்மை செங்கீரையாடியருளே ... *
சிவைகௌரியுமையருட்செல்வமரகதவல்லி செங்கீரையாடியருளே (௨)

பண்ணுருவரிவண்டுவிளரிமுரலும்மடற் பங்கயக்கோயில்வைகும் ... *
பவளவாயன்னமும்பனுவன்மொழியஞ்சிறைப் பைங்கிளியுமிருபாலுறத் *
தண்ணறுமதுமலர்ப்பொழிலுலவுமரகதச் சாயற்கலாபமயில்போற்... ... *
றவிசிற்கிடந்தரியதாளுதைந்தொண்டொடித் தண்காமுகிழ்த்துமயலா *
லெண்ணருவுயிர்களயர்வுறுதலைக்கண்ணுறீஇ யெழில்வாய்குவித்தாற்றி ...*
யெச்செயலுநம்பரமசுகலீலையென்றுளத் தெண்ணியுண்மூரலிக்குந் *
தெண்ணருவண்டுளபமாலவற்கிளையநீ செங்கீரையாடியருளே ... ... *
சிவைகௌரியுமையருட்செல்வமரகதவல்லி செங்கீரையாடியருளே. ...(௩)

முருகவிழ்கடுக்கைமலர்மாலிகைக்கோடீர முதல்வனைப்பைங்குழவியா ... *
முன்னளித்தண்ணல்பாலமுதப்பசுங்குதலை மொழிமகவெனப்பிறந்து *
வருகருணைலீலாவிநோதத்தெமையனை மணந்துயிர்த்தொகுதியாவு ... ...*
மணியுதரநோவாதுயிர்த்தழலினுருவர்க்கு வன்னியெனுநாமமிறுவிப் *

பொருகடலுடுக்குந்தராதலத்தழிவிலாப் புணர்முலைக்கன்னியென்னப் ...*
பொலிவுற்றரும்பழையதொண்டர்மேற்குழையொடும்பொருகயல்கிடந்தவிழியிற்
திருவருள்சுரக்குமொருபச்சிளம்பெண்பிள்ளை செங்கிரையாடியருளே ... *
சிவைகௌரியுமையருட்செல்வமரகதவல்லி செங்கிரையாடியருளே (௪)

விண்பட்டவொண்சிகரவேதண்டகோதண்ட வீரன்மார்பப்பொருப்பின்... ...*
மேவப்புரூரவெஞ்சாபங்குனித்தரி விழிக்கணைமுடுக்கிவிட்டுப் ... ...*
புண்பட்டவாயருள்சுரந்தளவுகுங்குமப் பொம்மன்முலைவெம்மையொற்றிப் ...*
பொன்னிதழ்விரிந்தசெங்குமுதவாயமுதம் புகட்டியுபசாந்திநல்கித் ... ...*
தண்பட்டஷண்முகச்சுதனைப்பயந்தருட் சத்திவடிவேலளித்துத் ... ...*
தறுகட்குறட்பூதகணமுடனெழுந்துசூர் தனிவேட்டையாடவிக்கும் ... ...*
தெண்பட்டவண்டமிழ்ப்பாண்டிப்பெருஞ்செல்வி செங்கிரையாடியருளே ... ...*
சிவைகௌரியுமையருட்செல்வமரகதவல்லி செங்கிரையாடியருளே ... (௫)

வேறு.

மலர்முகமிலகியதுவரிதழாடுற மணிநகைமுத்தாட .. ... ... ...*
வளரொளிவிரிதருநுதலணியாடுற மகரக்குழையாடக் ... ... ...*
குலநவமணிவடமாடுறவுச்சிக் கொண்டையசைந்தாடக் ... ... ...*
கொங்கைமலைப்பொறையாலிடைமின்னற் கொடியும்வளைந்தாட ... ...*
விலமணிமேகலையாடக்கங்கண மிளிர்பரிபுரமாட ... ... ... ...*
விரைசெறிமஞ்சரியாடுறமரகத மேனிகுழைந்தாட .. ... ...*
வலகறுபுவனசராசரமாடிட வாடுகசெங்கிரை ... ... ... ...*
யணிவளமிகுமழகாபுரியுமையவ ளாடுகசெங்கிரை ... ... ... (௬)

வண்டுகள்கிண்டிவிருந்தயரம்புய வானவனின்றாட ... ... ...*
மண்ணையளந்துழுதண்டுவளர்ந்திடு மாலுமுவந்தாடத் ... ... ...*
தெண்டிரைகங்கைத்தும்பவராவொடு திங்களுமுறவாடச் ... ... ...
செம்பவளக்கொடிவேணியுமோரெண் டிக்கும்விரிந்தாடத்... ... ...*
தொண்டினரஞ்சலிசெய்யுமலர்க்கழ றூக்கியெடுத்தாடுஞ் ... ... ...*
சுந்தரமாநடராஜனுநின்னெதிர் தொந்தோமென்றாட ... ... ...*
வண்டுதல்விண்டுபிணங்குமணங்கினை யாடுகசெங்கிரை ... ... ...*
யணிவளமிகுமழகாபுரியுமையவ ளாடுகசெங்கிரை... ... ... (௭)

கலைதெரிபுலவர்தமுளவயனந்து கரும்பேமஞ்சாருங் ... ... ... ...*
கனவரைபுயவரைதழுவியபிடிதரு கன்றேசங்கூரு ... ... ...*
மலைமிசைதுயில்பவனுடன்வருமிளையவ ணங்கேசிந்தூர ... ... ...*
மணிநுதலழகினியென துளனெழுதரு மன்பேசெந்தேனே... ... ...*
புலைவறுகைலையி லுறைதருமிறையுட ஞென்றாநின்றேயு ... ... ...*
முலகினிலெனையொருபொருளெனவடிமைகொ ளுந்தாய்வன்கூனற் ... ...*
சிலைநுதலயில்விழிமலைமுலையுமையவள் செங்கோசெங்கிரை ... ... *
திருவளரழகையிலெழுதருமின்கொடி செங்கோசெங்கிரை ... ... (அ)

வாசவனீலியகேசவன்வாணி மணந்தோயுங்கோமான் ... ... ...*
வானவர்மாதவரானவர்மேவி வணங்காநின்றேனு ... ... ...*
நேசமதோடுகுலாவியகாலையி னெஞ்சுருகும்போது ... ... ... ...*
நீதயவாயெனையாளுதி மாதெனநின்பாதஞ்சூட ... ... ...*

மாசகலோருளமேமகிழாதலர் மந்தாரஞ்சூடும் ... ... ...*
வார்சடைமீதுறுவானதிதாழ்வுற வந்தாளென்றுருந் ... ... ...*
தேசருளேபொழிலோசனமாதுமை செங்கோசெங்கீரை ... ... ...*
சீரழகாபுரிஞானமனோன்மணி செங்கோசெங்கீரை... ... ... (௧)

வேறு.

மாதர்களிற்சூடாமணி செங்கோசெங்கீரை ... ... ...*
மாதவருக்கோர்மாமதி செங்கோசெங்கீரை ... ...*
நாதர்தமக்கோர்நாயகி செங்கோசெங்கீரை ... ... ...*
நாகர்தமக்கோராருயிர் செங்கோசெங்கீரை ... ...*
போதவிருட்கோர்தீபிகை செங்கோசெங்கீரை ... ...*
போதுலகுக்கோர்மூலிகை செங்கோசெங்கீரை ... ...*
சீதரனுக்கோர்சோதரி செங்கோசெங்கீரை ... ... ...*
தேவியருட்சீர்மாதுமை செங்கோசெங்கீரை ... (௰)

செங்கீரைப்பருவமுற்றிற்று.

---

## தாலப்பருவம்.

தென்பான்மலயக்குறுமுனிக்குந் திருவார்கைலைப்பெருமுனிக்குஞ் ... ...*
செழுமாமறையுட்பொருடெருட்டித் தினையார்புனத்துக்குறமாதின் ... *
பொன்போல்வடிவத்தெழினோக்கிப் புனமாமயிலோபொற்கொடியோ ...*
பொன்னோமின்னோபுத்தமுதோ பொற்பூங்கொம்போவெனமாழ்கி ... *
யன்பால்வணங்கிப்பொற்பாவா யணியார்முலைச்செண்டிரண்டுமெனக் ... ...*
காடத்தருதியெனக்கெஞ்சு மாறுமுகப்பைங்குழவியினைத் ... ... ...*
தன்பாலணைத்துத்தாலாட்டுந் தாயேதாலோதாலேலோ ... ... ...*
தவர்சூழழகைப்பதிவாழுந் தனிமாதுமையேதாலேலோ ... ... (௧)

செழியவனசத்தயனெடுமால் செஞ்சூட்டெகினம்போழ்முகமாய்த் ... ...*
தேடுமளவிற்றிசழருணைச் சிகரிதனைப்பொன்மேல்கீழும் ... ... ...*
வழுவில்பளிங்குநீலத்தால் வனைந்துநடுவட்செம்பவள ... ... ...*
மணியாற்கிளருமாளிகையின் மலரிற்றிருவும்வாணியெனும் ... ... ...*
பழுதிலகன்றசேடியர்தம் பைம்பொற்குழைகுங்குமநக்கும் ... ... ...*
பணைமென்றடந்தோளங்காந்தட் பசியமலர்மென்றொடிக்கையாற் ... ...*
றழுவியிருந்துசாய்ஞ்சாடுந் தண்பூங்கொடியேதாலேலோ... ... ...*
தவர்சூழழகைப்பதிவாழுந் தனிமாதுமையேதாலேலோ... ... ... (௨)

செய்யதுகிர்ப்பூங்கொடிபடருஞ் சிகரப்பளிக்குப்பொருப்பின்மிசைச்... ...*
செம்பொன்மலர்ப்பைங்கொடிபடருஞ் செய்திகடுப்பச்செஞ்சடைதா ...*
ழையன்விபூதித்தூளிதஞ்சே ரணியார்மேனியிடப்பாகத் .. ... ...*
தணைந்துபனிவெண்மதிகதிரா யமுதநிலவும்வெயில்வீசும் ... ... ...*
பொய்யிலருளார்திருக்கண்கள் பொற்சூடகஞ்சேர்மலர்க்கையாற் ... ...*
பொத்தியெடுத்துவிளையாடும் பூங்கொம்பனையபொற்பாவாய் ... ...*
தையலடியார்நினைத்தவெலாந் தருகற்பகமேதாலேலோ ... ... ...*
தவர்சூழழகைப்பதிவாழுந் தனிமாதுமையேதாலேலோ... ... (௩)

வெண்பாலமுதக்கடறிரண்ட விளக்கநிகர்க்கும்வடகைலை ... ... ...*
வெள்ளிப்பொருப்பின்மிசைக்கல்லால் விரிந்தநிழற்கண்வீற்றிருக்கும்... *
பண்பாற்சிறந்தசிவபெருமான் பலவாம்வெய்துண்டலிற்கொழுநை ... ...*
பதைக்குமெனவுண்பலிசீத்துப் பரமயோகத்திருப்பவன்போ ... *
னண்பாற்காட்டியுலகுயிர்க ளுடாவண்ணந்திருவுளமா ... ... ...*
நவிலுமடலூடெழுதிவைத்து நாளுநாளும்பார்த்திருக்குந் ... ... *
தண்பான்மழலைமிழற்றுமுயிர்த் தனியோவியமேதாலேலோ ... ...*
தவர்சூழழகைப்பதிவாழுந் தனிமாதுமையேதாலேலோ ... ... (௪)

மழைகளுறங்கும்பனிநெடுமால் வரையின்முளைத்துடலினுள்ளம் ... ...*
வாடிமலர்த்தாண்மூலத்தே மகிணன்மதிக்கூன்கொழுவழுது ... *
விழையுங்கங்கைப்புனல்வார்ப்ப மேனிதழைந்துண்மகிழ்ச்சியினுன் ... ...*
மெல்லமுறுவற்சுறப்பரும்பி மிளிர்செம்முருக்கினிசழவிழ்ந்தே ... *
யிழையும்வதனம்புயமலர்ந்தோ தினியமொழித்தண்டேன்லுளித்திங்... ...*
கெளியேன்பாவக்கொலையினைக்காய்த் தின்பசுகமாங்கனிபழுத்துத் ... *
தழையுமலர்ப்பூங்கொடியாகிச் சாய்ஞ்சாடம்மேதாலேலோ... ... ...*
தவழ்சூழழகைப்பதிவாழுந் தனிமாதுமையேதாலேலோ ... ... (௫)

வேறு.

சமுதுகள்விழிவளர்தருமனாயிருளிற் கணிதமின்மதியுதயங்... ... ...*
கண்டனமெனவயன்மகளிர்கள்வதனங் கண்டெழுமள்ளரொலா ... *
முழுபவர்நடுபவர்கொய்பவராயவ ளுளவினையாற்றுறவு ... ... ...*
மொண்கமுளரிகண்முகுளிதமுறவு முற்பலமலர்வுறவும்... ... *
பழுதறுவான்வழிவந்தசகோரப் பட்சிகணிலவமுதம் ... ... ...*
பருகிடவும்பொலிதருமொருசெந்நெற் பணைவயலழகையினிற் ... *
றழைவிரிமரகதமயிலெனவளருமை தாலோதாலேலோ ... ... ...*
தங்குசௌந்தரமங்கலநாயகி தாலோதாலேலோ... ... ... (௬)

கனிவகைமலர்வகைசினைவகையொடுசெங் கழையினமுகுசெந்தேன் ... ...*
கால்வழியோடிப்பாய்தரவிளையுங் கழனியிலுழவரொலாம் ... ... *
பனிமொழிவயன்மடமகளிர்களைக்கால் பதமுகள்கண்கள்வரால் ... ...*
பசர்கமடங்கயலெனவெணியங்கைப் பற்றிவிடுத்தெதிர்வாய் ... *
சினையொடுமவைவரமுந்தைநினைந்து செங்கைதொடாதுறலாற் ... ...*
சேயிழையார்நகைபுரிதலின்முத்தஞ் செங்கமலஞ்சொரியுந் ... *
தனிவளமிகுதருமழகையில்வளருமை தாலோதாலேலோ ... ... ...*
தங்குசௌந்தரமங்கலநாயகி தாலோதாலேலோ... ... ... (௭)

விரிதருசவடுட்கள்ளமுமுட்டும் வீதிக்கடைபடலும்... ... ... ...*
மிக்குறுபங்கப்படுசலமுறலும் வெளிறிக்குமுறுதலும் ... ... *
மருமலிகற்பகமம்புயநிதிவரு வான்பசுமகிழ்சிந்தா ... ... ...*
மணிதவழ்கூனற்சுரிமுகநிதிசொரி மழைமுகிலுற்றதனுற் ... ... *
திருமலிநங்கைநிகர்ப்பனவோவவை செப்புமினீவிரெனச்... ... ...*
செம்பொன்மணித்திரணல்குகைகற்குஞ் செல்வநிறைந்தவர்வாழ் ... *
தருமழகைப்பதிவளர்தருமாதுமை தாலோதாலேலோ ... ... ...*
தங்குசௌந்தரமங்கலநாயகி தாலோதாலேலோ... ... ... (அ)

வேறு.

மனனூட்கருதியசெயலைச்செயுமரி மார்பார்பூமாதா ... ... ... ...*
மகிழத்துதிசெயுமலரிற்பொலியும் விதாதாநாமாதா ... ... ...*
கனமெய்ப்பணிசெயும்விரிகற்பகநிழல் வாழ்வார்சீர்மானூர்... ... ...*
கருணைத்திருவுளமதுவைத்தெமையிவண் காவாய்கோமாதே ... ...*
யெனவச்சுரர்தொழுமினியெற்கென்பணி யோதாய்நீமானே... ... ...*
யெனமெய்ப்பரனுரையளவிற்றிருமுக நாடாமாதேவா ... ... ...*
வனசக்கழல்வருடுகெவெற்கெனுமனை தாலோதாலேலோ ... ... ...*
மதுரத்தமிழ்வளரழகைப்பதியுமை தாலோதாலேலோ ... ... (௬)

வேறு.

கருணைப்புயலேசுகநற் கடலேதாலேலோ ... ... ...*
கடவுட்கிளியேகனகற்பகமே தாலேலோ... ... ...*
கிரணச்சுடரேசுடருக்கொளியே தாலேலோ ... ... ...*
கிளர்கித்திலமேகனகக்கொடியே தாலேலோ... ... ...*
தருணத்திருவேமறையுட்பொருளே தாலேலோ ... ... ...*
தனிமுக்கனியேகனியுட்சுவையே தாலேலோ ... ... ...*
வருணச்சுதையேமலையிற்பிடியே தாலேலோ ... ... ...*
வரனத்துமையேயழகைப்பதியாய் தாலேலோ ... ... (௰)

தாலப்பருவமுற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

நீர்கொண்டபுடவியிற்பேர்கொண்டநேரலர் நினைப்பினுநடுங்குவிக்கு... ...*
நீர்மைசெறிசிமயமாலிமயவரைராஜன்முக நிகழுமிருகண்மணியதாய்க் ...*
கார்கொண்டகுழலரிபரந்தவிழிமேனையங் கைவளர்பசுங்கிள்ளையாய்க் ... ...*
கவினுற்றுநாடொறும்வளர்ந்துவானமுதமுங் கைப்பெனவெறுப்பவன்னூர்...*
சீர்கொண்டவொள்ளியமடித்தலமிருந்துநற் செய்யபொற்கலமிரம்பச் ... ...*
சேர்த்துநுகர்நன்மணத்தீஞ்சுவைக்கறியமுது தேன்பாற்குழம்பளாவித் ...*
தார்கொண்டகுரவர்வாயூட்டுசிறுகையினுற் சப்பாணிகொட்டியருளே ... ...*
தண்ணமுதமன்னசொற்கன்னியுமையம்மையே சப்பாணிகொட்டியருளே. (௧)

முதலிறுதிநடுவறுமகண்டபரவெளியிலோர் மூலமில்லாமனுதியா ... ...*
முளரிப்பொகுட்டிலுறைவானவனைமாலவனை முக்கணனைமுற்பயந்தே... ...*
சுதமருவுமுலகினைவிதித்திடுகெகாக்குக தொலைத்திடுகெநீவிரொன்னுச் ... ...*
சொற்றருளிமுத்தமணிமாலிகைகௌத்துவத் தொடையக்குமணிமாலையும்...*
முதமருவுவெண்டுகிற்பீதாம்பரங்கொடிய மூரிபுற்றுேலாடையும் ... ...*
முரணுற்றபாசஞ்செழுஞ்சுடர்த்திகிரியுடன் முத்தலைச்சூலமற்றுஞ்... ...*
சதமுறவளிக்குநின்பங்கயக்கையினுற் சப்பாணிகொட்டியருளே ... ...*
தண்ணமுதமன்னசொற்கன்னியுமையம்மையே சப்பாணிகொட்டியருளே. (௨)

தினகரனும்வெப்பத்தமுங்குறநிலாமதிச் செய்யமரபிற்செனித்துச் ... ...*
செயமுரசமதிரநால்வகைசேனைசூழ்வரத் திக்குவிஜயம்புரிந்தே... ...*
வனமருவுமடலைவெண்பொடிபூசியூர்கடொறு மண்டையிற்பலிகவர்ந்து... ...*
மத்தப்பெரும்பித்தனென்றுலவுசொக்கற்கு மாமணக்கோலநல்கிக்... ...*

கனகமணியரியாதனத்திடையிருத்திமைக் கடலினையுடுத்தஞாலங் ... ... *
காத்தருள்கவென் றுசெங்கோலுதவிமாமணங் கமழ்நிம்பமாலைசூடித் ...*
தனகனகவஸ்துவாகனமுதவுகையினுற் சப்பாணிகொட்டியருளே ... *
தண்ணமுதமன்னசொற்கன்னியுமையம்மையே சப்பாணிகொட்டியருளே.(௩)

பனிநிலவுகுக்குமதிவன்கம்பகிறுவிவெண் பாற்கடற்குழிநாப்பண் ... ...*
பரியமந்தரவசலமத்திட்டுமுடவுப் படப்பாம்பிரச்சுவீச்சித்... ... *
தொனியெழமதிக்குநாள்கடைகாலமிதுவெனத் தொல்லுலகமுண்டுகக்குந் ...*
துளவணிமுகுந்தனயனுகண்டலன்சுரர்க டுஞ்சிடாதெமையளிப்பா ... *
னினியவருள்வைத்திடுகவென்றேலமிட்டயர வேழுலகுமிருள்பரந்த ... ...*
தென்றிடச்சீறிவருமாலகாலந்தனையு மெம்மானெடுத்துநுகர்காற் ... *
றனியமுதுசெய்வித்தபைந்தொடிக்கையினுற் சப்பாணிகொட்டியருளே ...*
தண்ணமுதமன்னசொற்கன்னியுமையம்மையே சப்பாணிகொட்டியருளே(௪)

சுபாகரத்தொனியுதவுடமருகக்கையினுற் சூழ்ஞாலவுற்பத்தியுந் ... ...*
தொல்லுலகிலபயப்ரதானமீந்தருளொரு சுடர்க்கையினுலளிப்பு ... *
மபாவமுற்றிடவுலகமாரழலெடுத்துவிளை யாடுகையாலழிப்பு... ... ...*
மகிலவுலகத்தினிடைவீசிவிளையாடுமல ரத்தமதனுன்மறைப்புஞ் ... *
சபாநடுவெடுத்துவிளையாடுமலரடியினுற் றத்துவந்தெளிவித்தலுஞ் ... ...*
சந்நிதானத்தினடப்பவொருசலமறச் சங்கரனடித்தனேக்கிச் ... *
சுபாசென்னமெச்சியிருகைத்தாளமொத்தல்போற் சப்பாணிகொட்டியருளே ...*
தண்ணமுதமன்னசொற்கன்னியுமையம்மையே சப்பாணிகொட்டியருளே(௫)

வேறு.

பூகநெடுந்தெங்கேடகமாழை புகல்பலவொண்கதலி ... ...*
புரிகழைசாலிகள்புடைபுடைசூழப் புதுசுவையுண்டிமையா... *
மாகதர்வந்துவணங்கிவரம்பெற வைத்துறுசோபான ... ...*
வழியெனநிலவுறுசீரழகாபுர மாநகர்தனின்மேயிப் ... *
பாகமறும்படியோதுறுவேதப் பழமொழியாமழலைப் ... ...*
பயிலுறுபஞ்சவனம்பொலிகடவுட் பைங்கிளிவைத்தெழிலார் *
கோகனகச்செங்கரமலர்மொட்டிக் கொட்டுகசப்பாணி ... ...*
கோதைமலர்ச்சுருண்மாதுமைமின்கொடி கொட்டுகசப்பாணி.(௬)

அமரர்கண்மகபதியடுவலியிலொன வலமரலுறல்காணு ... ...*
வஞ்சுதலகலுமினேம்புதுமென்றரு ளபயமளித்தயிலாற் ... ...*
சமரமுடன்றெழுமவுணர்களாவி தணந்துடல்வாய்க்கினையாத் ... ...*
தந்திடவுண்டுகிவந்தெழுசெங்கன குனவமானனையார் ... ...*
மமொடுகுழலைவிரித்தலையொலியென மார்பிலறைந்தழுநீர் ... ...*
வாரியினலனைவித்தமராதிபன் மகளின்மணந்தோயுங் ... ...*
குமரனைமார்பிலணைத்திடுகையாற் கொட்டுகசப்பாணி ... ...*
கோதைமலர்ச்சுருண்மாதுமைமின்கொடி கொட்டுகசப்பாணி ... (௭)

மிளிர்நவமணிசெறிமாளிகைநெற்றி விளங்குறுமுற்றத்தில்... ...*
வெள்ளியசுதைகொடுசெய்கதலிக்கனி விழைவொடுகோதுதலும் ...*
வளைதருகிஞ்சுகவலகதுநோவ வதிந்துறுபைங்கிள்ளை... ... ...*
வனமதில்விளைதருவாழைக்கனியையும் வனைகனியாவெண்ணித் ... *

தெளிவொடுநுகர்தல்விடுத்தருளின்சுவை செறிதருமானந்தத் ... ...*
தேங்கனியுண்டுகளித்துவியந்துன் சீர்த்தியெடுத்தோதுங் ... ...*
குளிர்பொழிலழகையில்வளருமொரிளமயில் கொட்டுகசப்பாணி... ...*
கோதைமலர்ச்சுருண்மாதுமைமின்கொடி கொட்டுகசப்பாணி ... (அ)

வேறு.

மறவிநினைப்பெனவுளமதின்மொய்த்த மருட்பாச ... ... ...*
வலையினிலுற்றுழல்வுறுமிகுமத்த மனத்தேனும் ... ... ...*
மறநெறிவிட்டொருபரசுகமுற்ற மலர்ப்பாத ... ... ...*
மருவியெடுத்திடுபவமறவைத்த வருட்பார்வைக் ... ...*
கறவுளநெக்குறவுருகினற்புக ழைப்பாடி ... ... ...*
யதிசயமிக்கருணடமிடவைத்திடு நற்றுயே ... ... ...*
யறம்வளர்வித்திடுமலைமகள்கொட்டுக சப்பாணி ... ... ...*
யழகையிலுற்றிடுமுமையவள்கொட்டுக சப்பாணி ... ... (௯)

வேறு.

மலையில்வளர்ந்தமடப்பிடி கொட்டுகசப்பாணி ... ... ...*
மதுரைபுரந்தமயிற்பெடை கொட்டுகசப்பாணி ... ... ...*
கலைகள்பயின்றவனக்கிளி கொட்டுகசப்பாணி ... ... ...*
கருணைகனிந்தமலர்க்கொடி கொட்டுகசப்பாணி... ... ...*
யலைவறநின்றவிளக்கொளி கொட்டுகசப்பாணி... ... ...*
யருளில்விளங்கமுதக்கதிர் கொட்டுகசப்பாணி ... ... ...*
நிலையுறநின்றமறைப்பொருள் கொட்டுகசப்பாணி... ... ...*
நிலவுமையம்பிகைசிற்பரை கொட்டுகசப்பாணி... ... (௰)

சப்பாணிப்பருவமுற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

ஒளிகொணவமணிமகுடமுடியரசரிருபுடையு முடுவினமேனுவிருப்ப... ...*
வுயர்மதியுதித்தெனச்சபாமண்டபத்தினிடை யுற்றமலயத்துவஜனு ... ...*
மளிகொணறுமலர்மருவுமோதிமமடப்பேடை யன்னகாஞ்சனமாலையு ... ...*
மகமகிழ்வுகூர்தரமடித்தலமிருந்துவிளை யாடியிமையாக்கருங்க ... ...*
ணளிகொணகைமுலையானையங்கரத்தாற்பற்றி நற்கடப்பாலருந்தி ... ...*
நாடிவனைமகரயாழினிதுகுழலினிதென்று நவிலாதிகந்துவர்ப்பக் ... ...*
குளிரமுதமழலைபெறுகுரவர்செவியூட்டுநின் குமுதவாய்முத்தமருளே ... ...*
கொம்மைதருகர்ப்பூரவல்லியுமையம்மைநின் குமுதவாய்முத்தமருளே... (க)

பேரின்பவெள்ளப்பெருக்கினையுடுத்தொளி பிறங்குமருண்முத்திநகரிற் ... ...*
பெருமௌனவித்திடைமுளைத்தாயிரங்கவடு பேசுலகெலாம்பரப்பி ... ...*
யோரின்பநறவொழுகுவிதிவிலக்குநாகளா மொண்மலர்மலர்ந்துண்மையா ... ...*
முபதேசமாவாக்கியக்கனிகனிந்துலகி லோங்குறவளர்ந்துநிற்குஞ் ... ...*
சீரின்பவுருவநிகமாகமாந்தச்செழுந் தேவதருவிற்பொலிந்து ... ... ...*
சிவநாமசங்கீர்த்தனக்குதலைமாமொழி செவிக்கமுதெனுமிழற்றுங் ... ...*
கூரின்பமரகதமடக்கிளிப்பிள்ளைநின் குமுதவாய்முத்தமருளே ... ... ...*
கொம்மைதருகர்ப்பூரவல்லியுமையம்மைநின் குமுதவாய்முத்தமருளே... (உ)

உம்பர்வளருலகுமயிராவதப்பிடரினி லுலாவருசுரேசனுலகு ... ... ...*
முலகுதருமுளரிமலரவனுலகுமதுரவமு துததிவளர்மாயனுலகுஞ் ... ...*
செம்பொன்மிகுமளகைமாநகருமழகாபுரச் சீர்மையையுமுதவதனுற் ... ...*
செறியுயிர்விடுத்திடுதனலமெனவுகாந்தவெந் தீயிற்குளித்தழியவு ... ...*
மிம்பரழியாதுவளர்தெய்வீகமாநகர்க் கிறைவியாயருள்பழுத்தே ... ...*
யெழிலாருமரகதத்திருமேனிதழைவுற் றிலங்குமாடகமலர்ப்பூங் ... ...*
கொம்பராயொல்கிவிளையாடுமொருபெண்பிள்ளை குமுதவாய்முத்தமருளே... ...*
கொம்மைதருசர்ப்பூரவல்லியுமையம்மைநின் குமுதவாய்முத்தமருளே. (௩)

மறைமுதலளப்பரியநூல்கணிணையல்லாது மற்றுமொருதெய்வமிலையென்... ...*
வாய்மையுணரார்கணெஞ்சென்னக்கலங்கியுணர் வாருளமெனத்தெளிந்து...*
கறையுலகவாழ்க்கையெனவருகியும்பெருகியுங் காலங்குடைந்தாடுவார்... ...*
காயத்தினுற்றவெம்பாவங்கழீஇயவர் கருத்துட்புகுந்துசுகமே ... ...*
நிறைவுறச்செய்துவான்கங்கைமுதலாற்றிற்கு நிகழுமொருபிந்துதன்னு ... ...*
னீள்சுவையளிக்குமின்றேனூறுபாய்ந்துவிளை நெல்வேலிசூழ்ந்திருக்குங் ...*
குறைவிலழகாபுரியில்வளருமொருகௌரிநின் குமுதவாய்முத்தமருளே... ...*
கொம்மைதருகர்ப்பூரவல்லியுமையம்மைநின் குமுதவாய்முத்தமருளே... (௪)

வேறு.

சித்தத்துவகைப்பெருக்கெய்தச் சிமயவிமயப்பொருப்பரசுங்... ... ...*
திருமாதனையமேனையெனுஞ் செவிலித்தாயுந்தென்பாண்டிக் ... ...*
கொத்தம்புரக்குஞ்செழியர்பெருங் கோனுங்கனகமாலையருட் ... ... ...*
கோமாமகளுமணைத்தணைத்துக் கொடுக்குங்கனிவாய்முத்துண்டு... ...*
பெத்தமிவர்ந்துவருங்கைலைப் பெருமான்றனக்குந்திருமுகப்... ... ...*
பிள்ளைதனக்குமாறுமுகப் பெருமாடனக்குமதன்மனைக்கும் ... ...*
முத்தங்கொடுக்குந்திருவாயான முத்தந்தருகமுத்தமே ... ... ...*
முற்றாவிளமைப்பெண்ணுமைநின் முளரிவாய்முத்தருளுகவே... ... (௫)

கடன்மீனிப்பியுலங்குடும்பு கதலிவனசஞ்செழும்பூகங் ... ... ...*
கரும்புநாகஞ்செஞ்சாலி கதிர்வெண்மதியமாவின்பல் ... ... ...*
குடவால்வளைஞெண்டதன்முதலை கொண்மூமகளிரொழிற்கண்டங் ... ...*
கூர்வேய்களிறுகருங்கேழற் கோடுதருவெண்பணிலமெலா ... ...*
மடலார்கனல்வெண்புனல்புழுதி யணேமிலருங்கேழொளிகுன்று ... ...*
மறிவோரிடுமொண்விலைமதிப்புண் டதனுற்பணியலாதிமறை ... ...*
முடிவாமழலைமொழிமலர்வாய் முத்தந்தருகமுத்தமே ... ... ...*
முற்றாவிளமைப்பெண்ணுமைநின் முளரிவாய்முத்தருளுகவே... ... (௬)

பாவாணருக்கிங்கருள்பழுத்துப் பரந்துவிரியுங்கற்பகமே ... ... ...*
பரமானந்தப்பழம்பொருளைப் பகல்போல்விளக்குமணிவிளக்கே ... ...*
சேவார்கொடியர்க்கமுதாகித் திகழுஞானமடமயிலே ... ... ...*
தீராப்பிறவிப்பிணிதீர்க்குஞ் சிமயவிமயமலைமருந்தே... ... ...*
மாவாய்த்தொளிருமரகதமே மலர்ப்பூங்கொடியேமாங்குயிலே ... ... ...*
வம்பனேனையீர்த்தீர்த்து வலிதாட்கொள்ளுமணங்கரசே ... ...*
மூவாமுகுந்தர்க்கிளையவருண முகிலேமுத்தந்தருகவே ... ... ... ...*
முற்றாவிளமைப்பெண்ணுமைநின் முளரிவாய்முத்தருளுகவே... ... (எ)

வேறு.

கணைபொருதிணையெறிகடலிருகுணில்படு கனஜயமுரசத்தைக் ... ... ...*
கணிதமிழுயிர்களிலெனவெலுமவரிலை கழறிடிலெனநக்கா ... ...*
விரிவுலகினிலொருபயமறவறைதரு மிகுமெழின்மதனுக்கோர் ... ... ...*
விரைசெறிநறுமலரொலியலையணிதர விதுவெனவளர்வுற்றே ... ...*
மணைபுரைகரவணைமிசையுறுமிரதியின் மதியனவதனத்தே... ... ...*
மலர்முகமிழைதரவுளமதுமகிழ்வுற மணியிதழுறுமுத்தந் ... ... ...*
தருமுமையழகையில்வளர்தருமயிலிய றருகநின்மணிமுத்தந்... ... ...*
தகையுறுமரகதவணமுறுமொருகிளி தருகநின்மணிமுத்தம்... ... (அ)

வேறு.

உளவிருளிரிதரவளவறுமொளிவிடு முத்தமசிற்பனையே ... ... ...*
யுகமுடிவிலுமழிவறவொளிர்தருமுமி ருக்குயிரொத்தவளே ... ...*
குளமதிலழல்விழியுடையவனிடம்வளர் குப்புகழ்நற்சிவையே ... ... ...*
குலமடமகளிர்களொடுமிருபுயமிசை கொட்டிநடிப்பவளே ... ...*
வளமதிமரபினிலமகடனையருள் வைத்துவளர்ப்பவளே... ... ...*
மறைபுகனெறியதுதெரிதரவடியவர் மட்டில்விளக்கொளியே ... ...*
முளரியைநிகரடியெனமுடிதருமுமை முத்தமளித்தருளே ... ... ...*
முதுதவர்துதிபுரிமரகதமயிலியன் முத்தமளித்தருளே... ... ... (கூ)

வேறு.

அடியர்நித்தமுடிவணக்கு மமலைமுத்தந்தருகவே... ... ... ...*
யருணைவெற்பிறவமியற்று மமுதமுத்தந்தருகவே ... ... ...*
கொடியதக்கன்மகமழித்த குமரிமுத்தந்தருகவே ... ... ... ...*
குலமறைச்செம்பொருண்மிழற்று குமுதமுத்தந்தருகவே ... ... ...*
கடியிதழ்த்தென்குவளைமைக்கண் கருணைமுத்தந்தருகவே ... ... ...*
கலைகண்மொய்த்தமதிமுகப்பைங் கௌரிமுத்தந்தருகவே ... ... ...*
சடிலமுற்றவரனிடத்து தருணிமுத்தந்தருகவே... ... ... ...*
தமிழ்மணக்குமழகைபுற்ற தலைவிமுத்தந்தருகவே... ... ... (ய)

முத்தப்பருவமுற்றிற்று.

---

## வருகைப்பருவம்.

கொந்துலவுநறுமலர்ச்சோலைவிளையாடிளங் குழவிப்பசுர்தென்றலுங் ... ...*
குங்குமங்களபகஸ்தூரிபனிநீருங் குழைத்தசந்தக்குழம்பு ... ... ...*
நந்துறுசுகந்தமலர்பெய்தபஞ்சணையுநிறை நன்மதிநிலாவெறிப்பு ... ...*
நற்றுகிலுமாடகப்பணிகளுமுடற்கின்ப நல்காவெனத்துறக்குஞ்... ...*
சந்தமுறுதன்குரவர்கண்களிதுளும்பமுன் றளர்நடையொடும்பெயர்ந்து ... ...*
தாய்வருகவன்னைவருகென்பவர்கள்பேதைமை தனைக்கண்டுமுறுவலித்தே...*
வந்தவர்கண்மார்பிடைவிழுந்துவிளையாடுமொரு மரகதக்கொடிவருகவே... ...*
வளமலியுமழகைமாநகர்மருவுமாணிக்க வல்லியுமையாள்வருகவே ... (க)

செம்பொனுலகத்தமரரிம்பருலகத்துநரர் சீர்மாதவத்துமுனிவர் ... ...*
திகழுரகரீண்டுற்றமாமணக்காவணத் தேவிதிசடங்குசெய்யக் ... ...*
கம்பமறுசெஞ்சுடர்த்திகிரிவளர்கையினுன் கரகத்தினீரொடுத்துக் ... ...*
கன்னிகாதானமதுசெய்யவிறைவன்றடக் கையினுலரைசிலையின்மேற் ...*
பம்புறவெடுத்துவைத்திடுநறியமென்மலர்ப் பாதவனசம்பெயர்ந்து ... ...*
பனியருள்சுரந்தமுகநாணினுலொல்கியெம் பரமேட்டிவிரல்கைகோத்து ...*
வம்பவிகளிடுமோமகுண்டத்தைமுக்காலும் வலம்வந்தமயில்வருகவே ... ...*
வளமலியுமழகைமாநகர்மருவுமாணிக்க வல்லியுமையாள்வருகவே ... (உ)

பரங்கடலுதித்தவருளானந்தவமிர்தருப் பாவைநின்வதுவைவேட்டுப் ... ...*
பகர்கைலைமீதுவடவாலடியிலேந்துட் படுத்திமாதவமுயன்ற ... ...*
நிரந்தரன்மலர்க்கைதாங்கிக்குலிசன்மகுடமிது நிகமனபிடேகமிதுவாம் ... ...*
நெடியவன்சுடிகையிஃதெண்டிசைபுரப்பவர்த நிலவுறுகிரீடமிவையா ...*
முரம்பொலிநராதிபர்கண்மௌலியிவையிடருறு மொதுங்கிநீவருதியென்ன ...*
வுரைசெயப்பரிபுரமலம்புறச்சிற்றிடையு மொல்கமேகலையிரங்க ... ...*
வரந்திகழுமலரடிபெயர்ந்தரியகொலுவிற்கு வந்தகோமகள்வருகவே ... ...*
வளமலியுமழகைமாநகர்மருவுமாணிக்க வல்லியுமையாள்வருகவே ...(ஙு)

துன்னியபராகநுண்டுகளாயிரம்பா ருெகுத்தவையுளொன்றெடுத்தொண் ...*
டுயமலர்மீதுறுபிதாமகனளப்பரிய தொல்லுலகினைப்படைப்பப் ... ...*
பன்னகவிராஜவுருவாகிவிரிமுதுகண பணுடவிபரிப்பநெடுமால் ... ...*
பன்னியவுகாந்தவனலிற்பொடிபடுத்தெழிற் பவளமணிமேனிமீதிற் ...*
பொன்னவிர்ஜடாடவிக்குழகனணிநீறெனப் பூசுதலினுரணங்கள் ... ...*
புகலரியசீர்மருவுநூபுரமலம்புமம் போருகச்சிற்றடிகளுண் ... ...*
மன்னியவிகாரமறவென்முடியளிப்பவரு வரைராஜன்மகள்வருகவே... ...*
வளமலியுமழகைமாநகர்மருவுமாணிக்க வல்லியுமையாள்வருகவே ... (சு)

வேறு.

மானேவருகவிமயமடமயிலேவருக மயற்பிணிக்கு ... ... ...*
மருந்தேவருகவெமதிருகண் மணியேவருகவானந்தத் ... ...*
தேனேவருகவின்னமுதத் தெளிவேவருகபெருஞ்செல்வத்... ... ...*
திருவேவருகபரனிடத்திற் சிவையேவருகபற்பலவா ... ...*
மூனேவருகவுடற்குளுறை யுயிரோவருகவுயிர்க்குதவு ... ... ...*
முணர்வேவருகவுலகளிக்கு முமையேவருகபெருங்கருணை ... ...*
வானேவருகவங்கயற்கண்மாதே வருகவருகவே ... ... ...*
வானோர்பரவுமழகைநகர் வாழ்வேவருகவருகவே ... ...(ரு)

திருவேவருகமெய்ஞ்ஞானத் திகழ்வேவருகவுபநிடதச் ... ... ...*
சிகையேவருகமயலகற்றுந் தெருளேவருகபரவிகிர்த ... ...*
குருவேவருகபழமறையின் குருந்தேவருகவருள்பழுத்த... ... ...*
கொம்பேவருகமரகதப்பூங் கொடியேவருககற்பகமாந் ... ...*
தருவேவருகமாலவற்குத் தங்காய்வருகவெமையளிக்குந் ... ...*
தாயேவருகபூரணமாஞ் சசியேவருகவிரிந்தமலர் ... ... *
மருவேவருகமாதுமையா மதலாய்வருகவருகவே ... ... ...*
வானோர்பரவுமழகைநகர்வாழ்வே வருகவருகவே ... ... (சா)

பதியேவருகபசுபாசப் பகையேவருகவரியதவப் ... ... ...*
பயனேவருகவிருள்சீக்கும் பகலேவருகபழமறையின் ... ... *
விதியேவருகமெய்ஞ்ஞான விளக்கேவருகமுத்திவிளை... ... ...*
வித்தேவருகபேரின்ப விளைவேவருகயாங்கள்பெறுங் ... ... *
கதியேவருகவருள்பழுத்த கனியேவருகவிருநிதியக் ... ... ...*
கடலேவருக்கலிதவிர்க்குங் கண்ணேவருகவுமையமுத... ... *
மதியேவருகசௌரியர்கோன் மதலாய்வருகவருகவே ... ... ...*
வானோர்பரவுமழகைநகர் வாழ்வேவருகவருகவே... ... ...(எ)

வேறு.

வாரணிபூண்முலைவருகவேசிறு வாலமனோன்மணிவருகவே... ... *
மாதுசிரோமணிவருகவேதிரு வாரருணூடகிவருகவே ... ...*
தாரணிபூங்குழல்வருகவேசிவ சங்கரர்பங்கினிவருகவே ... ... *
தருணவஜீகரிவருகவே மயிடாசுரசங்கரிவருகவே... ... ...*
கூரணிவேல்விழிவருகவேமிகு கோமளரூபிணிவருகவே ... ... *
குங்குமமார்பிணிவருகவேயனு கூலதயாநிதிவருகவே ... ...*
யாரணியுமையவள்வருகவேகரு ணாகரநாயகிவருகவே ... ... *
யாதிசௌந்தரிவருகவேயழ காபுரமங்கலைவருகவே ... (அ)

வேறு.

அருணகிரணமணிமிளிருமகுடமுடி யணியுமிளவரசிவருகவே ... ...*
யணியதரளமணியருவிசொரியுமலை யனையமுலையமலைவருகவே ... *
கருணையுததியிடைமருவியுலவுமிரு கயல்செய்விழியினவள்வருகவே ... ...*
கருதுமெமதிதயமலரினடனமிடு கௌரியிமயமயில்வருகவே ... *
தருணமருள்புரியவருதியெனவுருகு சரணரயிலமுதம்வருகவே ... ...*
தகைமைசெதியமரரணியுமணிமுடிக டமுவுசரணருளவருகவே ... *
வருணமுளரிமலர்வதியுமவள்பரவு மகிமைநிறையுமுமைவருகவே ... ...*
மலர்கண்மருவுபொழிலழகைநகரில்வளர் மதுரமொழிமதலைவருகவே ...(கூ)

வேறு.

அமலைமதுரையரசன்வழுதி யருளுமதலைவருகவே ... ... ...*
யளிகண்முரலுமுளரிவனிதை யமருமெழிலிவருகவே ... ... *
குமரிபுவனைசௌரிநறிய குவளைவிழியள்வருகவே... ... ... ...*
குழகனிடதுபுறனின்மருவு குழலின்மொழியள்வருகவே ... ... *
வுமையெனமுதமதியமுளனி லொளிருமிரவிவருகவே ... ... ...*
யுரகன்முடியினடனவரத னுரியவிளையைவருகவே ... ... *
மமர்செய்ஜனனமகலவுதவு வனசசரணிவருகவே ... ... ...*
வரதமுதவுமழகைநிதியம் வருகவருகவருகவே ... ... (ய)

வருகைப்பருவமுற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

அரிமுதல்சுரர்க்கமுதமுதவுவாய்நீயிவ ளரற்குவாயமுதமுதவு ... ... ...*
மங்குவளைநண்புகொண்டிடுவைநீயிவண்முளரி யங்கரக்குவளைநண்பாம் *
விரிதருகலாநிதியெனப்படுவைநீயிவள் விளங்கியதயாநிதியளாம் ... ...*
விண்ணிடையுலாவருவைநீயிவளுமெய்ப்பரம விண்ணிடையுலாவந்திடும் *

பரிதியொடுகூடிடுவைநீயிவளுமாரருட் பரிதியொடுகூடல்புரியும் ... ...*
பனிநிலாமுத்தமருள்புரிவைநீயிவள்களப் பணிலவான்முத்தமருளு ... *
மரியவுமையம்மையாமானந்தவல்லியுட னம்புலீயாடவாவே ... ... ...*
யத்திரியிராஜன்மகணித்யகல்யாணியுட னம்புலீயாடவாவே ... ...(௧)

வனைசடையிலுற்றிடுவைநீயிவளுமெம்பிரான் வாமபாகத்திருக்கும் ... ...*
வண்கலையுடுத்திடுவைநீயிவளுமொண்டுடி மருங்குமேகலையுடுக்குங் ... ... *
கனைகடலுதித்திடுவைநீயிவளிருஞ்சுகக் கடலிடையுதித்திலங்குங் ... ...*
கஞ்சமுகிழ்வித்திடுவைநீகங்கைமாமுகக் கஞ்சமுகிழ்விக்குமிவள்காண் ... *
சுனைதலுறுபைங்கூழ்வளர்ப்பைநீயுலகிலிவ டொல்லுயிர்ப்பயிர்வளர்க்குந் ... *
துன்னமிர்தசொருபநீயிவளும்பராவமிர்த சுகசொருபமாகுமதனு ... ...*
லனையவுமையம்மையுடனொருவாறுநிகர்தியா லம்புலீயாடவாவே ... ... *
யத்திரியிராஜன்மகணித்யகல்யாணியுட னம்புலீயாடவாவே... ... (௨)

கண்டுனையிறைஞ்சிடாக்கன்னியர்களிவளைமுக் காலுந்துதித்திறைஞ்சுங் ... ...*
காலினுலுன்னைக்குழைத்தவவனிவளடிக் கஞ்சமேதஞ்சமென்னு ... *
முண்டுரகமுமிழுமுச்சிட்டநீயிவளொருவ ருண்ணப்படாதவமுத ... ...*
முலகதனைவலம்வருவைநீயிவளடிக்கமல மும்பர்கள்வலம்புரிகுவார் ... *
மண்டமுதவாரியிற்கடைபட்டவுன்னையிவள் வாவென்றழைப்பவின்னம் ... ...*
வாராதிருப்பதுன்குறைமதியினல்கொலோ வாலையுமையம்மையெனவே ...*
யண்டர்களிறைஞ்சுதென்பாண்டிப்பிராட்டியுட னம்புலீயாடவாவே... ... *
யத்திரியிராஜன்மகணித்யகல்யாணியுட னம்புலீயாடவாவே ... ...(௩)

கவினுருவழிந்துநரைகொண்டகூன்கிழவனீ கன்னியாகுமரியிவள்காண் ... ...*
கயரோகமுற்றுடல்வருந்திடுவைநீயிவள் கடும்பிறவிநோயகற்றுஞ் ... *
சிவகங்கைமுன்றில்காத்திடுவைநீயிவள்கடைத் திருவாயிலும்பர்காக்குந்... ...*
திரளுறுகளங்கவுருவுடையைநீயகளங்க சிற்சுகசொரூபமிவளாம் ... *
புவனமுறுமதியநீயிவளோவகண்டபரி பூரணனந்தமதியம் ... ... ...*
பூருவத்துன்குலமிழைத்திடுதவத்தினுற் புவனையிவள்வாவென்றன ... *
ளவனிமகண்மௌலியழகாபுரியுமைத்திருவொ டம்புலீயாடவாவே ... ...*
யத்திரியிராஜன்மகணித்யகல்யாணியுட னம்புலீயாடவாவே... ... (௪)

குறைமதிதவிர்க்கலாங்கயநோயகற்றலாங் குமரிமுகமதியாகலாங் ... ...*
கூனுடனிமிர்க்கலாமாரியன்முனிந்திடுங் கொடியசாபந்தீரலாங்... ... *
கறையினையொழிக்கலாமரவுக்குநெஞ்சங் கலங்கிடாத்தன்மையுறலாங் ... *
கருணைபெருவெள்ளங்குடைந்துவிளையாடலாங் காயசித்திகளுமுறலா ...*
மறைபரவுமவியாவிளக்கமென வானந்தமலைமீதிருக்கையுறலா ... ... *
மலரோன்வகுப்பெலாமொருகுடையிலாளுமொருவாட்கையும்பெற்றுய்யலா
மலைறகழல்புணைந்தறம்வளர்த்தவுமையாளருகி லம்புலீயாடவாவே ... ...*
யததிரியிராஜன்மகணித்யகல்யாணியுட னம்புலீயாடவாவே ... (௫)

வேறு.

நறுமுகையவிழ்தருமலர்சொரிகற்பக நாடருள்செய்திடவோ ... ... *
நளினமெனணைமிசையுறைதருசதுமுக னலமதளித்திடவோ ... ...*
குறுநகைமுகமலர்மின்கொடிவீசிய கொண்டல்வளந்தரவோ ... ... *
குறைவறுநிதிவளரளகைக்கிறைமை கொடுத்தருள்செய்திடவோ ... ...*

விருதியுமுதலறநிறைதருமொருபே ரின்பமளித்துறவோ ... ... *
யாதுகொலோவிவளருளறியேமறு விலரிருபுடைநிற்ப ... ...*
மறுவுளவுனையிவண்வாவாவென்றனள் வாவம்புலிவாவே ... ... ...*
வளமலியழகையிலுமையுடனுடிட வாவம்புலிவாவே ... ...(சு)

காமனைநீறுசெய்வானழல்சிந்திய கண்ணுதலிவளன்பன் ... ... ...*
கனகனைமார்புபிளந்துகுடர்ப்புனை கண்ணனுமிவளண்ணன் ... ... *
காமருவேல்கொடுசூரையடர்த்திடு கந்தனுமிவண்மைந்தன் ... ...*
கார்நிறமகிடமுகன்றலைவீசிய கன்னியுமிவளன்னை ... ... *
தேமருமுள்ளநினைத்தன்முடித்திடு சிவகணமிவள்படையாந் ... ...*
தேவிமுனிந்திடிலாற்றுகிலாயிது செப்பினமிப்போதே ... ... *
மாமதிகொண்டுபிழைத்திடுவானிவண் வாவம்புலிவாவே ... ...*
வளமலியழகையிலுமையுடனுடிட வாவம்புலிவாவே ... ... (எ)

பரிவொடுதாய்தருபான்மணம்வீசிய பச்சையிளங்குழவி ... ... ...*
பனிமொழிசெவ்விதிருந்துகிலாவொரு பாலகிபெண்பிள்ளை... ... *
தெருவிடைசிற்றிலிழைத்தவணுடுறு சின்னஞ்சிறுகன்னி ... ... ...*
திகழ்தருநங்குலமுற்றுவளர்ந்திடு செல்வச்சிறுமதலை ... ... *
யுருநிழல்கண்டுமருண்டுபிடித்துற வோடுமடப்பிடியென்... ... ...*
றுன்னியிருந்துவிடேலிமவான்மக ளுள்ளமுனிந்தனளேன் ... ... *
மருவுலகதிலொருகதியிலையாகலின் வாவம்புலிவாவே... ... ...*
வளமலியழகையிலுமையுடனுடிட வாவம்புலிவாவே... ... (அ)

வேறு.

வயதுசென்றபடுமுதுமைவந்துடல் வளைவுகொண்டிடுகிழவனுய் ... ...*
வடிவிருந்துளநகரிருந்துணர் மதியுமின்றியமனிதனுங்... ... *
கயலைவென்றிவள்விழிசுரந்திடு கருணையங்கடல்குடைவனேல்... ... ...*
கடிநறுங்குழலதுசரிந்தணி கனகவொண்டொடிசிதறியே... ... *
மயன்முதிர்ந்துளவிருளிசென்றிடை வனையுமென்றுகிலவிழவே ... ...*
வரமடந்தையரவனுடன்றொடர் வருவனொன்பதையுணர்கிலாய்... ... *
வயமுறும்படிவ்ருகவென்றனள் வருகவம்புலிவருகவே ... ... ...*
மலைதருந்திருவுமைவிரும்பினள் வருகவம்புலிவருகவே ... (கூ)

அருணையங்கிரிவடிவுகொண்டிடு மவனிடந்திகழமுதமா... ... ...*
லழகையம்பதிவளர்பசுங்கிளி யருணடம்புரிமயிலியல்... ... ... *
கருணையங்கடல்கௌரிசுந்தரி கனகமென்கொடிமதுரையாள் ... ... ...*
கௌரியன்பெறுகுழவினன்குறு கமலைவெண்கலைமகளொடுந் ... ... *
தருணமங்கையரடியிறைஞ்சுநர் தமதுமங்கலநிலைபெறத் ... ... ...*
தனிவரந்தருகுமரியம்பிகை தயைநிறைந்திடுமிவளகோ... ... *
வருணவெண்கலைநிறையுமம்புலி வருகவென்றனள்வருகவே ... ... ...*
மலைதருந்திருவுமைவிரும்பினள் வருகவம்புலிவருகவே ... ... (ய)

அம்புலிப்பருவமுற்றிற்று.

## அம்மானைப்பருவம்.

ஒருகுணமுமில்லாதநிற்குணசொருபத்தி லொருமுக்குணங்கள்வருவித் ... ...*
தொன்றின்மும்மூன்ருகவொன்பதுகுணங்கள்பின் னுளவாம்படிக்கியற்றித்*
திரிகுணவிசிட்டதன்மாத்திரைகள்பூதங்க டேகபோகங்களாக்கித் ... ... *
திகழ்கின்றபசுபாசபந்தவிளைவாகின்ற ஜெகஜாலவித்தையாற்றிக் ... ...*
கருவில்வருதனுகரணபுவனபோகங்களைக் கண்மாயமிட்டொழித்துக் ... *
கண்டமிலகண்டபரவெளியிற்றிருப்பெருங் கருணைவிளையாடல்கூரு... ...*
மருளரிபரந்துலவுகெண்டைத்தடங்கணு யம்மானையாடியருளே ... ... *
யண்டர்களிறைஞ்சுதென்பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே (க)

செய்யபவளக்கானிறுத்தியொளிர்நித்திலத் திரண்மணிப்பந்தரிட்டுத் ... ...*
திகழ்கின்றமாமணித்தோரணம்வளைந்திலகு செஞ்சுடர்த்தீபமேற்றித் ... *
துய்யபூரணகும்பம்வைத்துவெண்பாலிகைகள் சூழவைத்தணிமங்கலச் ... ...*
சும்மைதருமுரசதிரமேற்சுரமடந்தையர்கள் சுருதிவாழ்த்தேத்தெடுப்ப *
வையகங்கண்களித்துளும்புறக்கல்யாண வாசலிலலங்கரித்த ... ...*
மஞ்சத்தினறுமலர்கள்பெய்தபஞ்சணைமீது வைகித்தளிர்க்கையிஞ ... ...*
லையன்மேற்பூச்செண்டெறிந்துவிளையாடல்போ லம்மானையாடியருளே ... *
யண்டர்களிறைஞ்சுதென்பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே(உ)

விம்பமதிமுகமாடவாயிதழ்துடித்தாட மென்முறுவன்முத்தமாட ... ...*
விற்புருவமாடவிருமகரவிழியாடமணி மேகலாவரணமாடக் ... ... *
கும்பமுலையாடவெண்முத்துவடமாடவேய் குங்குமத்தோள்களாடக் ... ...*
கொடியிடைதுவண்டாடவயிரமுடியாடவிரு குண்டலங்காதிளுடச் ... *
செம்பவளநற்கோவைபொற்ருெடிகளாடுறச் செஞ்சிலம்போலியாட ... *
சிற்றடிகள்பெயராதிருந்துவிளையாடவிரு சேடியர்களோடியாடச் ... *
வம்பலவருடனுடவாடும்பசுந்தோகை யம்மானையாடியருளே. ... ... *
யண்டர்களிறைஞ்சுதென் பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே.()

குளிர்தரளமுழுநீலமரகதப்பச்சைமணி கொண்டொழுங்காவிழைத்துக் ... *
கோலமுறுமம்மனைகளொன்றுபின்ஞென்றுவிசைகொண்டுசெல்கின்றதன்மை
நளிரிமயமலைமயில்பிரிந்துளம்வருந்துறு தனன்கருள்சுரக்குமுக்க ... *
ணுயகனறிந்திலகொ லவர்கொடுமையாதென நவின்றவரிருக்கைநாடிக் ... *
களிமுளரியன்னங்கருங்குயில்பசுங்கிளிகள் கண்டுவருசந்துரைத்துக் ... *
கையொடுகொண்ர்ந்திடுவமென்றுவெளியெங்கணுங் கையரிக்கொள்ளன்மானு*
மளிவளர்தொழும்பரனுபோகப்பராவமுத மம்மானையாடியருளே ... *
யண்டர்களிறைஞ்சுதென் பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே.()

சத்துவகுணத்திஞல் வெண்மைகொடிராசதத் தன்மையிற்செம்மையூறித் ... *
தாமதகுணப்புணர்வி ஞற்கருநிறத்ததாய்த் தனிமனமகண்டவெளியிற் ... *
ருெத்துறவெழுந்துவிளையாடல்போனின்பைந் தொடிக்கையிஞலெறிந்த ... *
தூயவம்மானைநகை நீழலின்வெண்மையாய்த் துவரிதழிஞற்செய்யதா ... *
யெத்துங்கருந்தடங்கட்பார்வைகொள்ளலா லேமுற்றமைவண்ணமா ... *
யிடமருவுமண்டவெளி நின்றுலவுமாலருளி னெம்மையாட்கொள்ளவல்ல *
வத்தனதிடத்துவளர் பச்சைப்பசுங்கொடி யம்மானையாடியருளே ... ... *
யண்டர்களிறைஞ்சுதென் பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே.()

குடவளைமணிச்சுருளுளைந்துதவுநித்திலக் குழுவினற்செந்துகிரினற் ... ... *
கோலமுறுநீலமெனி ரத்தினத்திரளாற் குயின்றவம்மனைகணின்கைத் ... *
தடமலரொடுத்துறுதன் முக்கட்பிரானையுஞ் சங்காழியங்கைநெடுமா ... ... *
றனையுமலரோனையு மருட்புதல்வராகமுன் றந்துளமகிழ்ச்சியதனுன் ... *
மடலவிழ்மலர்க்கரமெடுத்துவிளையாடுதலை மானுமஃதன்றிவையம் ... *
வருவித்தளித்தழிதல் புரிமுக்குணங்களையு மதகரிமுகச்சுதற்கூ ... ... *
ணடர்கவளமென்னக் கொடுத்திடனிகர்க்குமா லம்மானையாடியருளே ... *
யண்டர்களிறைஞ்சுதென் பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே. (௬)

சேண்படுகோலக்கமுகு முப்புடைத்தெங்குயர் செழும்பனைதழைந்தசூதந் ... *
தென்படுவருக்கைவளர் வாழைவேழம்பசுஞ் செஞ்சாலிமஞ்சளிஞ்சி ... *
யேண்படுமிடிச்செறுநர்பூதாவணம்படை யெடுத்தணிவகுத்திருப்பத் ... ... *
தீதெனப்பொலியுமழகாபுரியில்வாழ்வுறு மிலங்கிழைமடந்தைநல்லார் ... *
மாண்படுமுலைக்கிணையுருவெனவடித்தலின் மலர்க்கையம்மானையாட ... *
மன்னியதுவாரகையிலாயர்குலமங்கையர்கள் வார்முலைச்செண்டுவிளையா *
டாண்பிளைதனக்கிளையமரகதப்பெண்பிளா யம்மானையாடியருளே ... ... *
யண்டர்களிறைஞ்சுதென் பாண்டிப்பிராட்டியுமை யம்மானையாடியருளே.()

வேறு

பொதுமடமகளிரொனுங்கலைமகளெழில் பொங்குறுசெந்திருவும் ... ... *
பொன்னவமணிகுயி லம்மனையோடிப் போய்விளையாடுதலுங் ... *
கதுவுறுமடிபெய ராமலிருந்தொரு கற்புறுமம்மனைநீ ... ... ... *
கைம்மலரிற்பொலியம்மனையாடக் கண்டிதுபுதுமையெனு ... *
விதுவணிசடைமுடி யண்ணலசைத்திட வெண்டிரைபொங்குறுதல் ... *
விண்ணதிநின்னொடு மம்மனையாட விழைந்துறுதலைமானு ... ... *
மதுபிடியிதுபிடியெனுமொலிநிகழ்தர வம்மனையாடுகவே ... ... *
யருணிதிமலியழகாபுரியுமையவ ளம்மனையாடுகவே ... ... (அ)

கதிர்விடுமரகதவம்மனையொள்ளொளி கதுவக்கடவுளனங் ... ... *
களிமயிலிற்செறி தரமுதுகேதிக் கந்தனுலாவரலை ... ... *
விதியொடுமுறையிட முந்தைநினைந்தினும் வெஞ்சிறைவைக்குமெனு ... ... *
வேதனும்வாய்மலர் மூடலும்வாணுதல் விரைமலர்முகம்வாடச் ... *
சதியெனுநீதிருவுளமதிஞடித் தனையனையருகழையாத் ... ... ... *
தனமொடணைத்துக் குறுநகைகொள்ளுந் தண்ணொளியால்வெளிறி ... *
யதுவருகினிலுறமகிழ்கலைமகளுட னம்மனையாடுகவே ... ... ... *
யருணிதிமலியழகாபுரிபுமையவ ளம்மனையாடுகவே. ... ... (௯)

வேறு.

பத்தருளத்தினில் வைத்தவிளக்கொளி யம்மனையாடுகவே ... ... *
பத்திவலைப்படு பச்சைவனக்கிளி யம்மனையாடுகவே ... ... *
சித்தரிடத்து நடிக்குமயிற்பெடை யம்மனையாடுகவே ... ... ... *
சிற்சுகமெத்த விளைக்குமருட்கனி யம்மனையாடுகவே ... ... *
முத்தரிடத்தயலற்றமறைப்பொரு ளம்மனையாடுகவே ... ... ... *
முக்கணருக்குயி ரொப்பவிருப்பவ ளம்மனையாடுகவே ... ... *
யத்திமுகற்பெறு வுற்றமடப்பிடி யம்மனையாடுகவே ... ... ... *
யச்சழகைப்பதி யுற்றவுமைக்கொடி யம்மனையாடுகவே ... ... (௰)

அம்மானைப்பருவமுற்றிற்று.

## நீராடற்பருவம்.

புரிதருமமுக்காற்வாவெகுளியின்னாத பொய்யொடுபுறங்கூறுதல் ... ...*
பொலிதருமுயிர்க்கொலைபொருட்கவர்தலன்னியன் பொற்றொடிபுணர்ச்சியாதித்
திரிகரணமுற்றிடுமலச்சேறலம்புவான் சிவபத்திவாரியானோர் ... ... *
தேக்கித்திளைத்துக்குளித்துக்களித்தாடு திருவருட்கடலாகுநீ... ... *
புரிசடைநெடுந்துகிர்க்கொடிபடருமலையிலாப் பூரணானந்தவெள்ளப் ... *
பொருகடல்குடைந்துவிளையாடல்போனல்வகைப் பூமுகில்சுரப்பமல்கி *
விரிதிரைகொழிக்குமதுநதிகரைபுரண்டுவரு வெள்ளநீராடியருளே. ... *
வேதச்சிரத்தரசிருக்குமுமையம்மைபுது வெள்ளநீராடியருளே ... (க)

கொண்டல்விழிவளர்சிகரமால்வரையுதித்தகிற் கோடுசந்தக்குறடிருங் ... *
குஞ்சரமருப்பரவுகாலுமணிநித்திலங் கோகனகமிவைவரன்றித் ... ...*
தெண்டிரையினுற்புறமொதுக்கியொருதன்னிடைத் தெள்ளுபுனலாடுமடவார்... *
திருமார்புறுங்குங்குமக்கலவையைக்கழீஇச் சென்றலைசுருட்டுமோதம் ...*
பண்டுறுபுலாலுவரிரண்டையுமகற்றிப் பரிமளசுகந்தமதுரம் ... ... *
பாலித்தெனன்புனதுபேரருளொடுங்குலவு பான்மையினறக்கலந்து... ...*
விண்டுறுதுற்றமதுநதிகரைபுரண்டுவரு வெள்ளநீராடியருளே ... ... *
வேதச்சிரத்தரசிருக்குமுமையம்மைபுது வெள்ளநீராடியருளே ... (உ)

மலையுதவுமரகதக்கொடியனையநாமிடது வாமபாகத்திருக்கும் ... ...*
மாணிக்கமலையனையவிறையைத்தபோதனரு மன்னுசிவராஜயோக ... *
நிலையுதவுதுறவியென்றேத்தித்துதிப்பரிந் நீதிக்குமாறுசெய்வா... ... ...*
னின்மலன்சூழ்சடைக்காட்டிற்கரந்துறையு நீலியிவளென்னநெஞ்சத் ... *
துலைவுதருமூடல்கொண்டதுவொழியகங்கையுட னுறவுகொண்டாடல்போல ...*
வொளிர்சுருதிசாரமோவருளின்பெருக்கமோ வுயர்பரமசுகவாரியோ ...*
விலைசெயிஃதென்னமதுநதிகரைபுரண்டுவரு வெள்ளநீராடியருளே... ... *
வேதச்சிரத்தரசிருக்குமுமையம்மைபுது வெள்ளநீராடியருளே ... ...(ந)

பாசொளியசைவலங்கோகனகநீனிறப் பானன்மணிமுத்தமாம்பல் ... *
பணிலஞ்சகோரமங்காந்தள்விரிநீர்ச்சுழி பணங்கிடந்தொளிருமரவங் ...*
காசொளியவெள்ளித்தகட்டகட்டிளவரால் கமடமிவையென்பவெல்லாங் ... *
கௌரியர்குலத்துவருமம்மைநின்சுரிகுழல் கனிந்தருள்சுரக்கும்வதனம் ...*
தேசொளியவிழிமுறுவலிதழ்களங்கொங்கையணி செங்கைகொப்பூழ்நிதம்பந் *
திரள்கணைக்காலடிகளொழுகழகிரந்திடத் திரள்படநெருங்கிநிற்கும் ...*
வீசொளியமதரமதுநதிகரைபுரண்டுவரு வெள்ளநீராடியருளே ... ... *
வேதச்சிரத்தரசிருக்குமுமையம்மைபுது வெள்ளநீராடியருளே. ... (ச)

திருவருள்சுரந்தரிபரந்துலவுசேல்விழிகள் சேப்புறவுமுத்திழைத்த ... ... *
செம்பவளமொத்திடக்குறுமுறுவலிலகுவாய்ச்செவ்விதழ்விளர்ப்பெய்தவுங்
குருவளருநவரத்ன மணிமாலைகும்பமென கொங்கைப்புறத்தாடவுங் ... *
கொடியிடைதுவண்டுதள்ளாடவுங்கலைவாணி கோகநகையிந்த்ராணியென் *
றுருவளருமடநலாராயங்கள்பின்றொடர்ந் தோடிப்பிடிப்பவெள்ளத் ... *
துள்ளொளித்தப்புறஞ்சேட்சென்றுமேலெழுந்தோங்குவிண்ணதியாடல்போன்
மிருகமதநாறமதுநதிகரைபுரண்டுவரு வெள்ளநீராடியருளே ... ... *
வேதச்சிரத்தரசிருக்குமுமையம்மைபுது வெள்ளநீராடியருளே. ... (ரு)

வேறு.

பொருணைத்திருநதி வையைப்பெருநதி பொன்னிக்குருநதியும் ... ... *
புகழ்நற்சரஸ்வதி யென்னப்பொலிநதி புகல்யமுனைநதியு ... ... *
மருமைப்பகிரதி பெருமைச்சுரநதி யருள்தாம்வரநதிய ... ... ... *
மறிவைத்தருபர சுகமெய்ச்சிவநதி யாடமேடப்பாவா ... ... *
யிருமைப்பயனுட னெருமைப்பரகதி யிடையாடுநேரொவ்லா ... ... *
மெய்தச்சுருதிக ளளியிற்படிவுகொ டிளையுஞ்சிவஞானம் ... ... *
பொருவத்தனிமது நதியிற்புரள்வரு புதுநீராடுகவே ... ... ... *
பொன்னங்கிரிதரு கன்னிப்பெண்ணுமை புதுநீராடுகவே. ... (சு)

மகிமைசெய்சுயசிற் சொருபத்திடைவரு மலர்தலையுலகெல்லா ... ... *
மயலறமுண்மையு மொளிர்தலுமொண்சுக மயமுமடைந்துறலா ... *
லிகலறவொருபர மாகவிளங்குறு மென்னவுணர்த்துறவா ... ... *
னெழுதருகுமிழ்திரை நுரைசிறுதிவலைக ளென்பவையிடைமன்னு ... *
மகமகிழினிமையு மிளகலுநிறமு மமைத்தொருதன்மயமே ... ... *
யாகநிகழ்த்திப் பரசுகபோக மளிக்குறுமதுநதியிற் ... ... ... *
புகலருதுறையின் மடப்பிடியென்னப் புதுநீராடுகவே ... ... ... *
பொன்னங்கிரிதரு கன்னிப்பெண்ணுமை புதுநீராடுகவே ... ... (எ)

ஞானகரனிடை மேவாவந்தொரு நானுவழியாகி ... ... ... *
நவைதீர்முடிவினி லொருநீர்மையினுறு நலமார்சமயம்போல் ... ... *
வானூர்மலையிடை யானுவந்துபல் வழியாற்பலவுறுவான் ... ... *
மகிழ்தருபெயரா லொழுகுறுநடையான் மணிநீருலகதனி ... ... *
னுனுவிதமுறு நதியாய்க்கடையினி னளிர்கூரலைகடல்வாய் ... ... *
நணுகித்தெளிவுறு மொருபுனலாக நயந்துவயக்குறுமோர் ... ... *
வானுறதுதொழு தேனுரிடைவரு மணிநீராடுகவே ... ... ... *
வளமாரழகையி லருளார்பெண்ணுமை மணிநீராடுகவே. ... (அ)

அலைசூழுலகினி னிலையாதிடர்செயு மாசுசியதுவாகு ... ... ... *
மதனுவிடமுற வொளியாடகசுக வாசைகளறமாறு ... ... ... *
புலையார்தருமுடன் முதலாகியபொருள் போதகனருளாலே ... ... *
புரியாதரவற வொருவாகியதிசெய் போதமதருவாகி ... ... ... *
யலையாதொளிர்தரு கரியாய்நடுநிலை யூடுறுமனதூடே ... ... ... *
யுணர்வாரமிர்தக வுருவாய்மிளிர்தரு மோதமதெனுமாதே ... ... *
யலையாதிலகுறு சுடராகியமணி யாடுகபுதுநீரோ ... ... ... *
யளகாபுரிதொழு மழகாபுரியுமை யாடுகபுதுநீரோ... ... ...(க)

பொன்னேபுதுநீராடுகவேயற்புதையே புதுநீராடுகவே ... ... ...*
பூவாய்புதுநீராடுகவேபூங் குயிலேபுதுநீராடுகவே... ... ... *
மன்னேபுதுநீராடுகவேமர கதமேபுதுநீராடுகவே ... ...*
மடவாய்புதுநீராடுகவேமலை மயிலேபுதுநீராடுகவே ... ... *
மின்னேபுதுநீராடுகவேசுக விளைவேபுதுநீராடுகவே ... ... ...*
விழைவேபுதுநீராடுகவேமணி வெயிலேபுதுநீராடுகவே ... ... *
யன்னேபுதுநீராடுகவேதிரு வருளேபுதுநீராடுகவே ... ... ...*
யனமேபுதுநீராடுகவேயுமை யமுதேபுதுநீராடுகவே... ... (ய)

நீராடற்பருவமுற்றிற்று.

# பொன்னூசற்பருவம்.

ஆதியாமலமாயையயர்வுநினைவிரவுபக லற்றவெளிவீட்டினிற்பே ... ...*
ரறிவெனுந்தலைவனைக்கூடாதுகூடிபெறு மானந்தபோதமகவைச் ... *
சோதியார்மறைநித்திலத்தாம்பசைத்திலகு துய்யவுபநிடமணிப்பூந் ... ...*
தொட்டிலிட்டின்னமுதவாரியேதற்பரஞ் சோதியேசுகரூபமே... ... *
கோதிலாமெய்ஞ்ஞானமாணிக்கதீபமே குறைவிலுபசாந்தமான ... ...*
குணமெனுங்குன்றமேயென்னநானுவிதங் கூறிதலைடயிற்சுவானு ... *
பூதியாருளமகிழ்ந்தின்னூசலாட்டுமெவள் பொன்னூசலாடியருளே ... ...*
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௧)

மருவுமூலத்தினிற்குண்டலிச்சத்தியாய் வளர்சுவாதிட்டானமா ... ...*
மனையினிற்கலைமகளினுருவாயதற்குமேன் மணிபூரகத்தினிற்செந் ... *
திருவுருவமாயொளிரனாகதமனைக்கணொரு செய்யருத்ராணியாகித் ... ...*
திகழ்தருவிசுத்தியின்மகேஸ்வரியதாயருள் செறிந்திலகுமாக்கினையினி ...*
லருவுருவமாகியமனோன்மணியெனப்பொலிந் தணிமருவுபிரமரந்த்ரத் ... *
தறிவுதருசிற்சத்திவடிவாய்துவாதசாந் தத்திலானந்தமயமாம் ... *
பொருவரியசத்தியாயெம்மையாளம்மைநீ பொன்னூசலாடியருளே... ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௨)

பூதமுதனாதவரையானதத்துவமாம் பொருப்பின்முடியெய்தியுணர்வாம் ... ...*
புருடனொருருட்குளிகையுட்கொண்டுபரவெளி புகுந்துபிரமானந்தமாஞ் *
சீதவரநதியாடிவெம்பவச்சூடெலாந் தீர்ந்திரண்டற்றுநிற்குஞ்... ... ...*
சிற்சதானந்தசிவபெருமாற்கபின்னமாஞ் சிற்சத்தியாயிருந்துஞ் ... *
சாதனநிறைந்தபக்குவர்தமக்கவர்களது தத்துவசொரூபமதனைத் ... ...*
தனியுளங்கைக்கனியினுய்த்துணர்த்திடுகுவான் றண்ணருளினானிலத்திற் *
போதகுருவடிவாயிலங்குமொருகௌரிநீ பொன்னூசலாடியருளே ... ...*
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௩)

உலகம்வேறதையுணரும்நாம்வேறெனக்காண லுற்றநின்மலநனவி ... ...*
லோதுசற்சத்தியாய்க் கானல்வெள்ளம்போலவுலகுபொய்யென்றுகாணு *
மலகிலாநின்மலகனாவினிற்சிற்சத்தி யாகியாகாயமலர்போ ... ... ...*
லகிலமில்லையென்றுகாணின்மலசுழுத்தியதி லானந்தசத்தியாகி ... ... *
யிலகுபணியாவுமாடகவுருவமாதல்போ லிந்தவுலகெம்முருவமென் ... ...*
றெண்ணுநின்மலதுரியமதில்பராசத்தியா யிவ்வுணர்விறந்துநிற்கும் ... *
பொலிவுறுமதீதத்தபின்னையாய்நின்றசிவை பொன்னூசலாடியருளே ... ...*
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௪)

நின்மலப்புந்திமுகஞானவிஞ்ஞானவிழி நிகழ்தருவிரக்தியதரம் ... ...*
நெறிதருவிசாரமணிமுறுவனிருமமகார நீரகங்காரசெங்கை ... ... *
தன்மதிச்சிவயோகபோதவிளமுலைபெருஞ் சமுசாரசக்ரநாபி ... ... ...*
சந்தேகமின்னிடைவிகற்பசங்கற்பநற் றுள்கொடெண்ணெண்கலைகளாஞ் *
சின்மணித்துகில்பலத்தியாகபூர்வகதர்ம சிவபூசைகுருவுபாஸ்த்தி ... ...*
செறியிந்த்யநிக்ரகந்திடஞானமாகியாச் செப்புபொற்பூணணிந்தென் ... *
பொன்மதித்தவிசில்விளையாடுமொருபாவைநீ பொன்னூசலாடியருளே... ...*
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௫)

மறைமுதல்வனைந்தெழுத்துண்மையுணர்கானகர மாயைமகரம்மவிச்சை ... *
மாயையிற்பதிபலிதசைதன்யவீசனே வகரமதவிச்சையதனி ... *
லுறைதரும்பதிபலிதசைதன்னியசீவனே யுயர்வுற்றயகரமாகு ... *
மோதுபரசீவர்க்கதிட்டானசைதன்ய வுண்மையறிவானந்தமாய் ... *
நிறைதருஞ்சிவமேசிகாரமிஃதொன்றதே நித்தியப்பொருளதாக ... *
நிகழுமற்றவையெலாமிஃதன்றியில்லையென நின்னிலருளாலுணர்த்திப் ... *
பொறையொடுமிருத்தியெனவருள்புரியுமொருகௌரி பொன்னூசலாடியருளே ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௬)

ஒன்றாயிரண்டாகிமூன்றாகியைந்தாகி யோதுமெட்டுருவமாகி ... *
யுணர்வுதவுபல்வடிவமாய்சராசரமாகி யுலகமாய்க்குறைகடலுமாய்க் ... *
குன்றாகிவனமாகிமலராகிமருவாகி கோள்களாய்நாள்களாகிக் ... *
குருவாகியருமறைப்பொருளாகியதனில்வரு குணமாகிமணமதாகி ... *
நன்றாகித்தீதாகியிவைகளுக்கயலானநடுநிலைச்சாட்சியாகி ... *
நாதாந்தவேதாந்தபோதாந்தசித்தாந்த நவிலுகாலாந்தமாகிப் ... *
பொன்றாததிருவருட்படிவமாயிலகுசிவை பொன்னூசலாடியருளே ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௭)

மருவியெதிருற்றவிஷயங்கடலுமிருநாம மாயையங்கிசமென்னவே ... *
வரையுற்றுசச்சிதானந்தமெனுமூன்றினையு மாசில்சொருபாம்சமென்னத் ... *
திருமருவுளர்த்துணர்ந்தச்சொருபநாமெனுந் திடமருவிநிஸ்தரங்கத் ... *
தெண்கடலினைப்பொருவநிற்குநிலைதன்னினுந் தியகாமாதியுறுகால் ... *
கருவிகளினிஷ்ட்டமெனவொருவிநிர்ச்சங்கமாங் கரியைநாமென்றுகண்டு ... *
காற்றற்றதீபமெனநிற்குநிலைதன்னினுங் கைவல்யமாயிலங்கும் ... *
பொருவில்பரமானந்தவல்லியேதல்லியே பொன்னூசலாடியருளே ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே ... (௮)

சற்சத்தியானசுர குஞ்சரியோடானந்த சத்தியாங்குறமாதையுந் ... *
தன்னதிருபாலுமுற வைத்துசிற்சத்தியாந் தாரைநெடுவேலெடுத்து ... *
நற்சுத்தமாயைமயில் வாகனமிவர்ந்துமறை நாதசேவற்பதாகை ... *
நாட்டிமாவாக்கியப் பொருளினைப்பூரியா நல்குமுதல்வள்ளலென்னுங் ... *
கொற்சுத்தசைதன்ய சிவசுப்பிரமண்ணிய குருச்சக்ரவர்த்தியான ... *
குமரனையளித்துப் பரானந்தவமிர்தங் கொடுத்துமுத்தாடுஞானப் ... *
பொற்சத்தியானசிவ யோகசுந்தரவல்லி பொன்னூசலாடியருளே ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே. ... (௯)

தேமேவுகொன்றைமலர் மாலிகைவனைந்திலகு செக்கர்மணிவேணிவீர ... *
சேகரனிடத்திலுறை மாணிக்கவல்லியாய்த் தெண்டமிழ்ப்பயிர்வளர்க்கு ... *
மாமேவுவழுதிகுல மணிவிளக்காகிநிக மாகமச்சிங்கவணையில் ... *
வந்துகொலுவீற்றிருந் தருண்முத்திநல்குமொரு மங்கையர்க்கரசியாகிக் ... *
காமேவுகற்பகப் பொன்னகரினமுதனூர் கடிசோபனங்கள்பாடக் ... *
கருணைபொழிதிருமுக மலர்ந்தவர்க்கருள்புரி கடாக்ஷமுடனேயிலங்கும் ... *
பூமேவுசிவசுப்ர மண்யனுக்கன்னைநீ பொன்னூசலாடியருளே ... *
பூரணானந்தவைபோகசிங்காரவுமை பொன்னூசலாடியருளே. ... (௰)

பொன்னூசற்பருவ முற்றிற்று.

உ

சிவமயம்.

# குருமுறை.

இஃது

## மரகதமுத்துமாணிக்கத்திருப்புகழ்.

அமலையம்பிகை திரிபுரசுந்தரி விமலைமங்கலை பரசிவசங்கரி யடியர்வந்தித சர
ணபரம்பரி யருள்பாலா, வனகவம்பல மதிநடனம்புரி பரமனஞ்சலி யொடுநின
தம்புய வடிவணங்குற வொருமொழிதந்திடு மறைமூலா, கமலையிந்திரா மகிழம
ணந்தமு துததிதுஞ்சிய முகினிறசங்கரி கருதருந்திரு மருமகனென்றிடு குணசீலா,
கலைகளும்பல மறைமுறையுந்தெரி யயனைவெஞ்சிறை நிறுவிநிறைந்திடு கருணையங்
கட லெனவுலகந்தரு சுகலீலா, சிமையவொண்கிரி வருமதகுஞ்சர வதனவைங்கர
கணபதிவிஞ்சிய திருவுளங்களி கொளவொருதம்பென வருகோலா, திதிதருஞ்சுத
ரவர்கள்வதிந்திடு புரமொடும்பொடி படவமரம்புரி ஜெயநிறைந்திட நொடியில்
விடுங்கதிர் வடிவேலா, வமரரிந்திர னினமுடனைந்தரு நிழலிருந்துயர் சுகமதடை
ந்திட வணிசெயுந்திரு வருணிறைசண்முக வனுகூலா, வமரகுஞ்சரி வனசரமின்
கொடி யுடனெழுந்தொரு மரகதமஞ்ஞையி லடியனுய்ந்திட வெதிரினடம்புரி
முருகோனே. ... ... ... ... ... ... ... ... (௧)

குமரஜடானன சரவணபவகுக கடகபுயாசல மறைதெரிபுலவர்கள் குரவ
சிகாமணி யெனுமவரெதிர்வரு மயிலோனே, குவளைவிலோசனி யொருபுரமிலகிய
பவளசடாதர னருள்விழிகளிதர குலவுபுயாசல மிசைமிகுகுதிகொளு மயிலோ
னே, சமரசிகாவல குரவணிபதயுக களபபயோதர வனசரிபுணர்பவ தவளமதா
சல மிசைவருமகபதி மருகோனே, தழுவுசராசர முழுவதுநிறைதரு நிமலபராபர
வடிவனினைவது தருகருணாகர வுமையமுதுதவிட வளர்வோனே, திமிரதிவாகர
வுளநிறைபரசுக சுகுணவரோதய மலவிருளெனவரு திதியகுலாந்தக முனிவரர்
பணிதரு மிறையோனே, சிகரமனோகர மணிமதில்புரிசைக ளிரணியபூதர மென
வொளிர்சினகர திருவுநிலாவிய பழனியில்வளர்தரு முதல்வோனே, தமரமகோ
ததி யரவணைமிசைதுயி லுவணசுகேதன வரிதிருவுளமகிழ் தரவிளையாடிய சரண
மதெனமுடி தருவோனே, தருணவஜீகர முகவனிதையரொடு கருணையசாகர மெ
னமயிலெயினிடை தமியனனுதியி னெதிரருணடமிடு முருகோனே. ... ... (௨)

வேதகம்புரி குறுமுனிபரவிய நாதசண்முக வடமணிகுடமுலை வேடமின்
கொடி தழுவியபுயமலை யுடையோனே, வேதநன்குற மொழிதருமொருபொரு
ளோதவந்தருள் புரியெனமுதலவன் மேவருங்குரு பணிவிடைபுரிதர வருள்வோ
னே, சீதரன்றிரு மருமகளெனமலை மாதுமங்கைத னொருமகனெனவுயர் தேவ
குஞ்சரி தலைமகனெனவுள மகிழ்வோனே, சீதரஞ்சித மொழிவனசரமகள் பாத
பங்கய மலரிணையணிதரு சேகரன்குக னறுமுகனெனுமவ ரடியோனே, வாதமம்
புலி வெளிபுனலனலவி ராதவன்பனி மதியுயிரொருவடி வாயெழுந்திமை யவர்
தரிசனமுற நிறைவோனே, வாதுவந்திடு மமணர்கள்கழுவுற நீதருந்திரு முறை
நதியெதிர்செல மாறனுஞ்சிவ சமயமதடைவுற வருவோனே, நாதவிந்துக ளணி
மரகதமயில் கோழியங்கொடி யெனமிளிர்தருதிரு நாகையங்குடி வளர்வடிவழ
கிய குமரோனே, ஞானமங்கைய ரிருவர்தமொடுமயின் மீதிவர்ந்தென தெதிரு
ணிறைசுக நாடகம்புரி சரவணபவகுக முருகோனே. ... ... ... (௩)

சுபமஸ்து.

குருமுறை

# இராயபுரம்பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

வெண்பா.

சீர்மருவிராயபுரச் செல்விழியாள்சூடுமணத் ... ... ...*
தார்மருவுசுந்தரன்பொற் றாளடைய—வேர்மருவ ... ...*
லாகும்பதிற்றுப்பத் தந்தாதிபாடுகைக்கு ... ... ...*
மாகுஞ்சரமுகன்றாள் வாழி. ... ... ... ...*

காரானைமுகமொற்றைக் கொம்பிரண்டு காதுமுக்கணல்வாயைங் கரமுங்கொண்டு
பாராதிதனிலுள்ளோ ருய்யும்வண்ணம் பாக்கியமாம்பொருட் செல்வங்கல்விச்செ
மாராதவருட்செல்வஞ்ஞானச்செல்வ மானந்தசெல்வமிவையருளாநிற்குஞ் [ல்வ
சீராருஞ்செல்வவிநாயகன்மலர்த்தாள் சிந்தைசெய்வாரெமதுகுல தெய்வமாவார்.

---

மன்னுமாமறைமாலயனுணர்வரு மாசறுசுயஞ்சோதி ... ... ... *
பொன்னுலோகமும்பரவியராயமா புரத்திலங்கயற்கண்ணி ... ... ...*
யென்னுமாதொடுசோமசுந்தரனென விருந்தருள்பெருங்காக்ஷி ... ... *
யுன்னுமாதவருவர்க்கடல்புணைதரு முவகையுற்றிருப்பாரே. ... ... (க)

பாரெலாம்புகழ்சாருவபூமனும் பசந்துணர்த்தருநீழற் ... ... ... *
சீரெலாமிகுமும்பர்கட்கிறைவனுஞ் செழியபங்கயத்தோனு ... ... *
மேரெலாமிகுந்திருமகட்கேள்வனு மெய்தியவாழ்வெல்லாம் ... ... ... *
நீரெலாமிகுமிறைபுரத்தமலனை நினைப்பவர்நினையாரே. ... ... (உ)

நினையுமாறிலாநிருவிகற்பாங்கான் னிட்டைமிற்பரஞானம் ... ... *
புனையுமாதவர்தமக்கயலின்றிய போதசுந்தரமூர்த்தி ... ... ... *
தனையுமோகைசெயங்கயற்கண்ணியென் றாயையுமறச்சென்னி ... ... *
யனையதாகியராயமாபுரத்திற்கண் டற்புதமடைந்தேனே. ... ... (ங)

தேன்செய்மென்மொழி யுவாமதித்திருமுகஞ் சிலைநுதற்கருங்கூந்தல் ... *
மீன்செய்மைவிழியுமையொருபாகனை விண்ணவர்கோமானைக் ... ... *
கான்செய்பொங்கர்சூழிராயமாபுரத்தினிற் கண்டுகண்களிகூர ... ... *
யான்செய்மாதவமென்னைகொன்முன்னைநா ளிற்றெனவறியேனே. ... (ச)

ஏனைவாதிகள்பிதற்றியசமயநூ லிடைமனந்தளர்வெய்தி ... ... *
யானையாவகைசமரசமானதன் னியல்பினைவெளிகாட்டி ... ... ...*
வானைமானுறுமசங்கசித்துருவென வைத்தெனையாட்கொள்ளுங் ... ... *
கோனைராயமாபுரத்தினின்மரகதக் கொடியொடும்பணிவேனே. ... (ரு)

பணியுந்தும்பையுமத்தமுங்கங்கையும் பனிதருமதிக்கீற்றும் ... ... *
அணியுஞ்செஞ்சடைக் குழகனையழகனை யமுஞ்சிமாவனத்தானைத் ... ...*
துணியுமங்கயற்கண்ணிமணாளனைச் சோமசுந்தரன்றனைப் ... ... *
பணியுஞ்சிந்தையற்றயற்கடவுளர்த்தொழு பவர்விதிவசமென்னே. ... (சா)

என்னைவானவர்மாதவர்முனிவர்களியாவருமேமாக்கப் ... ... ...*
பொன்னையேவளர்த்திடுதருராயமா புரத்திலங்கயற்கண்ணி ... ... *
யன்னையோடெழுந்தருளிநம்மிறையவ னடியவர்குழாங்கட்குத் ... ...*
தன்னையேதரவிருந்திடுகின்றதோர் தண்ணருளதுதானே ... ... (எ)

தானெனுஞ்சிவசச்சிதானந்தமெய்த் தற்பரமதுதானே ... ... ...*
கோனெனும்படிவந்துநன்மனுநெறி கோன்முறைதிசையோச்சி ... ... *
மீனெனுங்கயற்கண்ணிதன்னொடுங்கொலு வீற்றிருந்தருண்மூதூர் ... ...*
நானெனும்பசுமதியிலாதவர்துதி ராயமாபுரமன்றே... ... ... (அ)

அன்றுநால்வருக்காலடியிருந்துநல் லறநெறியுரைத்தானை ... ... ...*
மன்றுளோடமாடியசெல்வனை வானவர்கோமானை ... ... ... *
யின்றுதேசிகராயமாபுரத்தினி லிருந்தருள்புரிவானை ... ... ...*
யென்றுநாயினேற்களிவருபரமனை யேத்துதிமடநெஞ்சே ... ... (கூ)

நெஞ்சமேநமக்கென்குறைகாமனை நீத்தவன்கொடுங்கூற்றை ... ... ...*
யஞ்சவேயுதைத்தருளியபெருந்தகை யலைகடலதுதந்த ... ... *
நஞ்சமேயமுதாக்கியவானவர் நாயகன்குருராயன் ... ... ... ...*
புஞ்சமாமருள்வாரியாயிராயமா புரத்தினிலுறும்போது ... ... (ய)

வேறு.

போதாணிறைந்ததருநிழற்கீழ்ப் பொன்னாலியன்றமணித்தவிசின் ... ...*
மீதாவிருந்துவுலகாளும் விண்ணோர்க்கிறைவன்முன்னாற்றுந் ... ... *
தீதால்விளைந்தபெரும்பழியைத் தீர்த்தகயற்கண்மடக்கொடிதன் ... ...*
ஞூதாராயபுரமருவு நம்பாகோடிநமஸ்க்காரம் ... ... ... ... (யக)

காரம்பொருந்துதவளமத கரியுமிறைஞ்சிமுன்னிற்ப ... ... ...*
வீரம்பொருந்துதிருவுள்ள மிரங்கிச்சாபமறமாற்றி ... ... ... ... *
வீரம்பொருந்துமிறைபுரத்தின் மீனநோக்கியுடனமர்ந்து ... ... ...*
பேரன்புடையர்க்கருள்புரியும் பெம்மானேயெம்பெருமானே ... (யஉ)

மானஞ்சிறந்தவழுதியர்கோ மகனார்கதம்பவனமெறிந்து ... ... ...*
தானஞ்சிறந்ததலம்விளக்குந் தகுதியுரைத்தபெருவணிகர் ... ... ... *
கோனஞ்சிறந்தவன்பனெனக் கொண்டேயவன்றன்குலத்தினைக்காப் ... ...*
பானஞ்சிறந்தராயபுரம் பதியாக்கொண்டான்பரம்பரனே ... ... (யங)

பரமிதென்றுமகமேதம் பண்ணுமலயத்துவசனுளச் ... ... ... ...*
சிரமமகலத்தனதொருபாற் றெள்ளாரமிர்தின்சுவைபோல ... ... ... *
விரவும்பரையைமகவாக்கி வினைகள்கடிந்துமகராய ... ... ... ...*
புரமதுறையுஞ்சிவக்கொழுந்தின் பொன்னார்கமலச்சரண்போற்றி ... (யச)

போற்றிப்படைகள்புடைசூழப் போர்க்கோலத்திநொடுபோந்து ... ...*
சாற்றுமுலகபாலர்தமைச் சயங்கொண்டெதிர்ந்தமடக்கொடியை ... ... *
யாற்றுமுறையின்மணந்துமுடி யணிந்துசெங்கோன்முறைநடத்தித் ... ...*
தேற்றுமிராயபுரமருவு செல்வாபோற்றியடிக்கமலம் ... ... ... (யரு)

மலங்கண்மூன்றுமொருங்கறுக்கும் வலியதவத்துப்புலிமுனியும் ... ...*
நலங்கொள்புயங்கப்பெருமுனியு நரருங்கண்டுகளிகூர ... ... ... *
விலங்கும்வெள்ளிமணிமன்று ளின்பநடனம்புரிந்தருளி ... ... ...*
வலங்கொளிராயபுரமருவு வள்ளன்மலர்த்தாள்வணங்குதுமால் ... ... (௰௬)

மால்செய்கயற்கட்டிருமடந்தை மனையிலடுபோனமுகமுறும் ... ... ...*
பால்செய்தருந்தும்படிபூதப் படைவேந்தனுக்குப்பணித்தருளிச் ... ... *
சூல்செய்வளைமொய்த்திடுபழனந் துன்னுமிராயபுரமருவி ... ... ...*
மேல்செய்கருணைச்சொக்கேசர் விழிக்குவிருந்தாயிருந்தனரோ ... ...(௰௭)

இருந்தான்பூதப்படைவீர னிளைப்புந்தவிப்புமெய்துதல்கண் ... ... *
டருந்தாநிற்கும்படியருளா லன்னக்குழியொன்றழைத்தருளி ... ... ...*
வருந்தாதிருத்திராயபுரமருவியடியர் பவப்பிணிக்கு... ... ... ... *
மருந்தாயிருந்தசிவக்கொழுந்தை வணங்காத்தலையுந்தலையாமே ... (௰௮)

தலைவாவருத்தும்பெருந்தாகந் தணித்தியென்னக்குடையாள ... ... ...*
னிலைவாய்தெரிந்துபெருவையை நீத்தமளித்தநின்மலனைச் ... ... ... *
சிலைவாயிராயபுரமருவு தெள்ளாரமுதைக்காணுனைக் ... ... ... ...*
கலைவாணருஞ்செங்கமலமலர்க் கண்ணனெனற்கென்காரணமே ... (௰௯)

காரணஞ்செய்மாமியெனுங் கனகமாலைநீராட ... ... ... ... ...*
வாரணங்கள்புகன்றமுறை யாழியேழுமழைத்தருளிப்... ... ... *
பூரணஞ்செயிராயபுரம் பொருந்திச்சனனக்கடலேழும் ... ... ...*
மாரணஞ்செய்பெருமானை வழுத்தாவாக்கும்வாக்காமே... ... ... (௨௰)

வேறு.

காமருமாதுகாஞ்சனமாலை கடலாட... ... ... ... ...*
மாமனையிங்குகூயருள்செய்த மாதேவன் ... ... ... ... *
பூமகள்வாழுந்தேசிகராய புரவாசன் ... ... ... ...*
ஞமனைமென்றுள்சேர்கிலர்செய்யுந் தவமென்னே ... ... (௨௧)

தவமிகுமுக்ரகௌரியசெல்வன் றனையீன்ற ... ... ... *
நவமிகுமஞ்சேல்விழியுமைபாக னனிநாளுஞ் ... ... ... *
சிவமிகுராயபுரபரமேசன் றிருமுன்னர் ... ... ... *
பவமறநில்லார்புவியினில்வந்தென் பலன்கண்டார் (௨௨)

பலகலைதேருங்குமரனிடத்திற் படைவேலுங் ... ... *
குலவளைசெண்டுந்தந்தருளெங்கள் கோமானை ... ... *
வலமிகுராயபுரமதினாளும் வலஞ்செய்வா ... ... ... *
ரலமிகுபோகம்வீடு மிரண்டுமடைவாரே ... ... (௨௩)

அடைதருவேலை வேலையிலேவ வருளாலே ... ... *
படைமிகுமுக்ர பாண்டியனடைசொப் பனமெய்தி ... ... *
விடைதருராயபுரமதில்வாழும் விடையூர்தி ... ... *
கடையனையின்பக் கடலிடைவைத்த கணக்கென்னே. ... ... (௨௪)

என்வலிகாணென்றெதிர்வருதேவர்க் கிறையோனுந் ... ... ... *
தன்வலியோடுமௌலியிழந்து தளர்வெய்த ... ... ... *
மன்வளைவீசுமாறனிறைஞ்சு மாதேவன் ... ... ... ... *
பொன்வருராயபுரமதிலென்னைப்புரந்தானே. ... ... ... (உரு)

புரமுறவீசுஞ்செண்டடிகொண்டு பொன்மேரு ... ... ... *
தாமிகுசேமநிதிகொடுமாறன் றருக்கெய்த ... ... ... *
வரமருள்சோமசுந்தரனென்னை வாவென்று ... ... ... *
திரமிகுராயபுரமதில்போதஞ் செய்தானே. ... ... ... (உசு)

செய்தவர்வேதப்பொருளதுதேரத் திருவுள்ளஞ் ... ... ... *
செய்தவனெயின்மூன் றெய்தவன்வேதன் சிரமொன்றைக் ... ... *
கொய்தவனிறைமாபுரபரமேசன் குறிகொள்ளாக் ... ... *
கைதவமேவுஞ்சமயிகள்யாது கண்டாரோ. ... ... ... (உஎ)

கண்டனைவோருங் கண்களிகூரக் கவின்பாண்டி ... ... ... *
மண்டலமன்னன் மைந்தனுவப்ப மணிநல்கும் ... ... ... *
வண்டமிழோங்கு மிராயபுரத்து வணிகேசன் ... ... ... *
றொண்டர்கள்பாதந் தொழுதுதிப்பார் சுரரெல்லாம் ... ... (உஅ)

சுரபதிவாய்மை கொடுகடனிருபன் சோதிப்பான் ... ... *
வரவிடுவாரி சுவறிடமேக மடுத்தண்ண ... ... *
வரவிடுராய புரமுறுநீல மணிகண்டன் ... ... ... *
பரவிடுமன்பர் புகவறியார்கள் பவவாரி. ... ... (உகூ)

வாரியிராயன் மதுரையின்மீது வரவிட்ட ... ... *
மாரிதடுத்தங் கன்னவனுதர வலிநீக்கிச் ... ... ... *
சீரியராய புரமுறுமெங்கள் ஜெகதீசன் ... ... ... *
காரியல்கண்டன் றிருவடியல்லாற் கதியுண்டோ ... ... (ஙഠ)

வேறு.

ஓதுபூவுலகுதேவலோகமென வும்பரிவ்வுலகமாகவே ... ... *
மாதராடவர்களாகவாடவர்கண் மாதராகமிகுமேழைக ... ... ... *
ளாதராகவிளையாடுராயபுர ஞானபோதகுருநாதனைப் ... ... *
போதசித்திபெறவேண்டுமோதவர்கள் போற்றுவார்பரவியேற்றுவார். ... (ஙக)

வாரிசூழுலகமாளுநீண்மகுட மாறனெஞ்சுகளிகூரவே ... ... *
பாரின்மீதுசிலைவேழம்வேழமிசை பான்மைகாணௌவுணர்த்திய ... *
நேரிலாதகுருராயமாநகர நேயசுந்தரவிநோதனை ... ... *
வேரிலாதசிலையானநெஞ்சுருக வேண்டுவாரவர்கள்வேண்டுவார். ... (ஙஉ)

வேண்டுஞானநெறி தேர்கிலாதமண வேடரேவுமதவாரண ... ... *
மாண்டுவீழநரசிங்கவாளிவிடு மானராயபுரவாசனு ... ... *
மீண்டுமூலமலமானவாரண மிறந்தியான்கருணைசேரவே ... ... *
மீண்டுஞானநரசிங்கவாளிவிடு வீரம்யாதெனவிரிப்பதே. ... ... (ஙங)

விரியுமால்சமயமா னுறுங்கொடிய வேடர்தீவினையையஞ்சியே ... ... *
பரியுமாதுமுனமுதியநற்றருண பாலராகிவிளையாடியே ... ... *
துரியஜோதிவடிவாகியன்பர்தொழு சோமசேகரகிர்பாளுவா ... ... *
யரியராயபுரமருவுமீசனடி யார்களுக்கடிமையாவனே. ... ... (௩௪)

ஆவலால்பரதநூனவின்றுநட மாடிநின்றுணருமாரனும் ... ... *
பாவலாளர்தொழுதேவனேயுனது பாதமாறிநடமாடியென் ... *
னேவலானதுகொளென்னுமாறிசையு மீசனென்பிறவிநாசனுய் ... ... *
மேவலானபதிராயமாநகர மென்னவேதியர்கள்பன்னுவார் ... ... (௩௫)

பன்னுமூழ்வலியி னுலிறந்தவொரு பவ்வமாதுபழியஞ்சியே ... *
யுன்னுமாறனதுதேருமாறுந லுபாயமொன்றுணாதயாபர ... ... *
னென்னுமீனவிழி மங்கைபங்கனை யிராயமாபுரநிவாசனைப் ... ... *
பின்னுவார்சடிலநாதனைப்பரவு பேறுபெற்றவர்பிறந்திடார் ... ... (௩௬)

ஆரியன்பரவுதாதைவேதியனை யட்டுமன்னையையணைந்துமே ... *
பாரினின்றுமலைபூரியன்பெரிய பாதகந்தனையொழித்திடுஞ் ... ... *
சீரிலங்குமருள்கண்டுவந்துனது சேவடித்துணையடைந்தனன் ... ... *
பேரழிஞ்சிவனவாசனேயளவு பேசரும்பிறவிநாசனே ... ... (௩௭)

நாசகாலமதுகூடலாலேகுரு நாதனுக்குரியபன்னிமே ... ... *
னேசமேவியுழனீசனைச்சமரி னெடியவாள்கொடுதடிந்திடு ... ... *
மீசனேயடியர்நேசனேதிருவி ராயமாபுரநிவாசனே ... ... *
பாசமோசனவிலோசனுவுனது பத்தர்பாலெனையும்வைத்திடே. ... (௩௮)

வைத்தசித்தமதில்வஞ்சவெஞ்சமண மானதீனர்விடவந்திடும் ... ... *
பைத்தமாசுணநிசாசரன்றனுயிர் பாணமொன்றினெமனூர்புக ... *
வுய்த்துவெற்றிகொளமாறனுக்கருளு மும்பனேகருணைநம்பனே ... *
மெய்த்தபோதனர்கள்சூழிராயபுர மீனலோசனிமணுளனே. ... (௩௯)

ஆளுருதமணநீசரோவுமய லாவைநந்திமகேசநீ ... ... ... *
மீளுருதவகைநூறிவாகையொடு மீடியென்றருளுமீசநின் ... ... *
வாளுலாவுமகராயமாநகர் வாசமானவர்கள்சேவடித் ... ... *
தூளுருதலையெனெனக்குவிதி தோன்றுவித்தனனிலத்திலே. ... (௪௰)

வேறு.

நிலத்திலேவழுதியர்கோன் படைசேர்க்கக்கொடுத்தமிகு நிதியமெல்லாந் ... *
தலத்திலேதிருப்பணிகள் பலவியற்றுஞ்சாமந்தன் றனக்குவேண்டிக் ... *
குலத்திலேமிகுதருமப் பரியுகைத்துமெய்க்காட்டுக் கொடுத்ததென்னே ... *
புலத்திலேகுருராய புரத்திலேயிருந்தருளும் போதமூர்த்தி. ... (௪௧)

மூர்த்திவழிபாடடியர் தொழும்பிவையிற் பேரன்புமுதிராநின்ற ... *
சீர்த்திமிகுஞ்செழியர்பிரான் றனக்குலவாக்கிழிகொடுத்த செல்வன்றுனு ... *
பீர்த்தடியர்சங்கநிதி திருச்சரணபதுமநிதி யிரண்டுமுள்ளப் ... ... *
பூர்த்தியொடுமெம்மனோர்க் கருள்புரியக் குருராயபுரமுற்றுனே. ... (௪௨)

முற்றாதவிளமுலையாருளத்திறும்பூதடையவவர் முன்னரீண்டிப் ... ... *
பொற்றாமலர்க்கரத்திற்பொன்வளையிட்டருளுமருட் புனிதனெங்கோன் ... *
கற்றார்கடவம்புரியுமழிஞ்சிமாவனத்துறையுங் கருணையாளன் ... *
மற்றாருமறியாதென்மனத்தருளாந்தளையிட்ட வழக்குநன்றே ... ... (௪௩)

நன்றாரும்பொற்கலசமுலையமுதமுருகனுக்கந்நாளிலூட்டும் ... ... *
பின்றாழுங்குழன்மடவாரட்டமாசித்திபெறப் பேசும்வெள்ளி ... ... *
மன்றாடுநடராயன்மகராயபுரத்தினிடை வதிந்தியார்க்கு ... ... *
மின்றாரும்பிரமசித்திவழங்குகின்றானுலகெலா மீண்டிடவோ ... (௪௪)

ஈரமனந்தனைக்காணும்பேரன்பாலுருகுபுகார்க் கிறைவற்காகக் ... ... *
காரமருமெயில்வாயிறிறந்தடைத்துவிடைபொறித்த கருணைமூர்த்தி ... *
யேரமருமிறைநகரத்திருந்துவினைக்கடைபூட்டி யெம்மனோரைச் ... ... *
சீரமருமுத்திவழிமணிக்கதவந்திறந்துவிடுந் திறமைகாண்மின் ... (௪௫)

மின்பரவுமணிமகுடச்செழியர்பிரான்படைவளவர் வேந்தன்போரிற் ... *
பின்பரவுமிளைப்பாறப்புனற்பந்தர்வைத்தருளும் பெருந்தயாளன் ... *
பொன்பரவுமிறைநகரத்தங்கயற்கண்மடந்தையொடும் பொருந்திநாளு ... *
மின்பநறும்புனல்ருத்தியடியர்பவக்களையாற்ற லென்னேயென்னே ... (௪௬)

என்னையாளியானேயென்றுணர்ந்தடியர்க்கன்னமளித் திறைஞ்சாநிற்கும்... *
பொன்னனையாள்பொருட்டிரதவாதவினைமுடித்தருளும்பூமச்சோதி ... *
யின்னனையார்மலரழிஞ்சிவனத்திலினிதமர்ந்தடியேனிருப்புநெஞ்சத் ... ... *
தன்னனையாரருட்குருவாற்சிவமாகவேதைசெயுஞ்சமர்த்தென்சொல்கேன். (௪௭)

சொல்லரியசதுரங்கப்படைகொடுவந்தமராடுஞ்சோழவேந்தை ... *
யெல்லரியவதன்வீட்டித்தென்னவனைப்புரந்தருளு மிடபவூர்தி ... ... *
வெல்லரியவகங்கரத்தையவித்தையிடைப்புகவீட்டி விம்பாபாசர் ... *
புல்லரியமுத்திநகர் புகவிடுப்பான்மகராய புரமுற்றானே. ... ... (௪௮)

உற்றார்களடியவரொன் றவர்க்கடிமைபூண்டொழுகு மொருமெய்த்தொண்ட ... *
ரிற்றாவுநல்குரவுதீரவுலவாக்கோட்டை யீந்தபெம்மான் ... ... ... *
வற்றாதசெல்வநிறை மகராயபுரமதனில் வதிந்தெந்நாளுங் ... ... *
கற்றாவின்மனம்போலக் கசிந்துருகுமடியார்களைக் காக்கின்றானே. ... (௪௯)

ஆனதனபதியாய்வந் தவையிலெதிர்வழக்காடி யருத்தமெல்லாம் ... *
மானமதிமுகவனிதை சிறுவனுடனுவப்பவருள் வணிகர்கோமான் ... *
மீனவிழிமடந்தையுட னிறைநகரத்தெழுந்தருளி விகற்பங்கூறு ... ... *
மீனசமயிகள்வழக்குத் தீர்த்துமறைப்பொருளடியர்க் கீதல்பாரீர். ... (௫௰)

வேறு.

பார்புகழ்மங்கலமுரசமதுரைமூதூர் பரமசுகசிவலோகமாக்குவித்துச் ... *
சீர்புகழன்புடையவரகுணதேவர்க்குத் திருவுள்ளமகிழ்சிறப்பக்கருணைசெய்து *
கார்புகழுங்கருங்கூந்தற்கயற்கண்ஞானக் கரும்பினொடுமாணிக்கக்காஷிநல்கும் *
பேர்புகழ்மன்புரச்சோமசுந்தரேசப் பெருந்தகையேபோற்றிஜயபோற்றிபோற்றி.

போற்றியரியயனமரர்முனிவர்யாரும் பொன்னடிக்காட்படுமடிமைபூண்டுநி
ற்ப—நாற்றிசையும்பரவுமிசையாழ்ப்பாணற்கு நானடிமையெனவிறகுமுடியிற்று
ங்கி — யாற்றியநல்லமுதவிசைக்கீதம்பாடி யடுபகையைத்துரந்தருளு மொருநின்
னல்லாற் — சாற்றியதன்பெருமையெண்ணுதடியர்க்காக்கும் தயவெவர்க்குண்டி
றைநகரத்தமர்ந்தவாழ்வே. ... ... ... ... (௫௨)

வாழ்வுமிகுஞ்சேரர்பிரானென்னுமேகம் வளமைசெறியாழ்ப்பாணக்குணக்குன்
றின்பாற்—ருழ்வுசெயாதிருநிதியச்செமபொன்மாரி தணவாதுபொழிகவெனமு
டங்கறீட்டி — யூழ்வலியமிடிக்கோடைதணிப்பானல்கு முத்தமனேயிறைநகரத்
துறையுங்கோவே — யேழ்வகைவெம்பவவறுமைதிரமுத்தி யின்பசுகவாழ்வெனக்
குநல்குகண்டாய் ... ... ... ... ... (௫௩)

கண்டதிசைபுதையமுகிலினங்கள்வெள்ளிக் கார்போலுமழைபொழிநள்ளிரவு
தன்னிற்—றெண்டர்சிரமணியனையதிவவுகோலான் றுன்னியிருந்தமுதவிசையாழ்
வாசிப்பப்—பண்டரியகனகமணிப்பீடநல்கும் பரங்கருணைத்தடங்கடலேபரவை
சூழும்—மண்டலமன்னகருறையுமரசேநின்றன் மலரடியிலிருப்பெனக்கும்வழங்
கல்வேண்டும் ... ... ... ... ... (௫௪)

வேண்டியிசைப்பணிபுரியும்பத்திரன்றன் விழியனையமடக்கொடியைவெல்வா
னெண்ணி — யீண்டியவின்னுதற்கருங்கட்பவளச்செவ்வா யிசைமடந்தைதலைசா
ய்ப்பவியற்றுமாங்கே—தாண்டியெனையெதிர்ந்துவழக்காடுநெஞ்சந் தலைமடங்கப்
புரிந்தெனையுமடிமையாக்கொண் — டாண்டிடுதனின்னருளின்கடமையன்றோ வ
ணிராயபுரத்துறையுமமரரேறே. ... ... ... ... *

ஏறனையவழுதியினுற்றந்தைதாயை யிழந்துழலும்வயவேனக்குருளைகட்குக்—
கூறரியவன்னையாய்த்திருமுலைப்பால் கொடுத்தருளும்பெருங்கருணைக்குன்றேகங்
கை—யாறமருஞ்சடைமுடியாயகங்காரத்தா லறிவிழந்துபரிபவங்கொளடியனே
ற்கும்—வேறரியவருளமுதம்புகட்டிஞான வீடளிப்பாயிறைநகரவிருப்புளானே.()

விருப்பமரும்வயவேனக்குருளைகட்கு மெய்யுணர்வுநல்கியமைச்சியனடாத்
தச்—சுருப்பமரும்பொழிற்பாண்டிநிருபன்றன்பாற் றுன்னுவித்தாங்கறிவிலியாந்
தொண்டனேனு—மிருப்பமருமனமுருகிப்பெரியர்தம்பா லிருந்துபணிபுரிந்துகரை
யேறவைப்பா — யருப்பமருமுலைகயற்கண்மடந்தையோடு மணிராயபுரத்துறையு
மமரர்கோவே. ... ... ... ... ... ... (௫௭)

கோவேயெம்மிறையேயெம்மிறைபுரத்துக் கொற்றவனேகயற்கண்மடக்கொ
டிமணாளா — தேவேநின்செம்பொனடிக்கன்புசெய்யுஞ் சிறுகயவாய்க்குபதேசஞ்
செவியிற்கூறிப்—பூவேயெவ்வுயிர்களினும்வலியானாகப் புரிந்தருளுந்திருவருளின்
பெருக்கைக்கண்டுஞ்—சேவேறுந்திருவடிக்காட்படுதலின்றிச் சிறியனேனாள்கழிக்
குந்திறமிதென்கொல். ... ... ... ... (௫௮)

கொல்லாமற்கொடியபுலாலுணவுணுமற் கோகனகக்கோகநகப்பொய்கையா
டி—யல்லாருமிரவுபகல்விரதனேற்கு மன்புறுவெண்குருகரசுமின்பவீட்டிற்—செ
ல்லாநின்றுறக்கருணைக்கடைக்கணேக்கஞ் செய்தருளுமிறைநகரச்செம்மலேநீ—
யல்லாமலுயிர்த்துணைவேறெனக்கிங்குண்டோ வாதலினுலெனைப்புரப்பானருள்
செய்வாயே. ... ... ... ... ... ... (௫௯)

செய்வாய்நின்கருணையினலருளினெல்லை தெரிந்ததன்கனேருசிறியன்வாழும் வண்ணங்—கைவாய்செம்மணிப்பணியான்மதுரையெல்லை கண்டுதெளிந்ததில்வா மூங்கௌரியன்போன்—மெய்வாய்கண்செவிநாசியொருங்கிநின்ற மெய்த்தவர்க ளுளம்போலுமிறைபுரத்தின்—மைவாய்மென்மலர்க்கூந்தற்கயனெடுங்கண் மரக தப்பூங்கொடிபடரும்பவளக்குன்றே. ... ... ... (சுய)

வேறு.

குன்ருதுமாசுந்தரநாமவாளி கொடுசோழமன்னனெடுபோர் ... ... *
வென்ருதிகன்னிவளநாடனுக்கு விறல்வாகைதந்தமுறைபோ ... ... *
னன்ருருஞானவிகல்வாளியேவி நலிபாசபந்தமழியா ... ... ... *
நின்ருயுமென்னையிறைமாபுரத்து நிமலாபுரத்தலினிதே. ... ... (சுக)

இனிதாயசங்கமுதுவாணர்தம்மை யெதிர்நாவலோர்கள்வலிதேர் ... *
தனிவாணிபீடமுறையோடுநல்கு தலைவாவிராயபுரிவாழ் ... ... *
புனிதாவெனேடுமெதியாயவாது புரிவோர்களெஞ்சுவலிதேர் ... ... *
கனிஞானபீடமருளோடுதந்து கடையேனைரக்ஷபுரிவாய் ... ... (சுஉ)

புரிநாவலோர்களெதிர்பாடிவென்று பொதிமாடுதந்துமறையோன் ... *
பரிவோடுநல்லமணமேவுவித்த பரனேயிராயபுரனே ... ... ... *
தெரியார்கள்செய்யுமிகல்வாதுவென்று சிவஞானநங்கைமணநான் ... *
புரியாறுசெய்யவருளாய்முடிந்த பொருளீதலென்றுபுகலாய் ... ... (சுங)

புகலாயடைந்துபுகழ்பாடியன்பு புரிகிரனுய்யவருளா ... ... *
லகல்வாவிநின்றுகரையேறுவித்த வரனேயிராயபுரனே ... ... ... *
நகமாதுகெண்டைவிழிமாதுபங்க நவைகூறுவெய்யபவமாம் ... ... *
மகவாரிநின்றுகரையேறலின்று வருமாறெனக்குமருளே. ... ... (சுச)

அருள்கொண்டுசெய்யதமிழ்வண்மைகிரனறிவொன்றுகும்பமுனியாற் ... *
றெருள்கொண்டிலங்குவகைமுன்புரிந்த செயல்போலவின்றுமெளியேன் ... *
மருள்கொண்டசிந்தைதெளிவொன்றிநாலு மறைநூலுணர்ந்தகுருவாற் ... *
பொருள்கண்டுணர்ந்துசுகபோதமெய்தல் புரிவாயிராயபுரியாய் ... (சுரு)

புரிகின்றவெய்யகலகங்களன்று புலவோர்தவிர்ந்துவிடவே ... ... *
தெரிவொன்றுமூமைமகனைப்பணித்த செயல்போலிராயபுரிவாழ் ... *
வரியொன்றுகெண்டை விழிமங்கைபங்க மௌனேபதேசகுருவால் ... *
விரிநெஞ்சுகொண்டு சமயங்கள்செய்யும் வினைதீரவின்றுபணியே. ... (சுசு)

பணியன்பனுகுமிடைக்காடனேடு பகரும்வடாதுமதுரை ... ... *
யணிசென்றமர்ந்துசெழியன்செருக்கை யகல்வித்தநின்னையலதே ... *
பணிலங்கடுன்றுவயல்சூழிராய பதிமேவுமாதிபகவ ... ... *
தணிவின்றிதெய்வவமிழ்தன்னசெய்ய தமிழ்வண்மையாவரறிவார் ... (சுஎ)

வாராழிதன்னில்வலைவீசிமீன மகரம்படுத்துநெடுமுன் ... ... *
னீராளுமன்னன்மகளைப்புணர்ந்த கிருபாபுரத்துநிமலா ... ... *
சீராருமங்கண்வலைவீசிவிந்த ஜெகவாரிநின்றுமனமீன் ... ... *
வாராவென்றன்னைநின்சேடியிக்ப் மணமின்றுகொள்ளமதியே. ... (சுஅ)

மதிசூழுமிஞ்சிநெடுவாதவூரர் மலபாககாலமதுகண் ... ... ... *
டெதிரோபெருந்துறையிலேகுருந்தி னிடைமேவிஞானமருள்கூர் ... ... *
துதிமேவுபோதகுருவாகியின்ப சுகபோதநல்கியெனையா ... ... *
ளதிருபராயபுரநாதவெள்ளை யடலேறுயர்த்தசிவனே. ... ... (சுகூ)

சிவநேசரானபரிவீரரோடு திசைமேவுசம்புவினமா ... ... *
நவமார்துரங்கமவைசூழநாப்ப ணவில்வேதமாயபரிமே. ... ... *
லிவராநடத்தியிகன்மாறனெஞ்ச மிசைவித்தராயபுரியாய் ... ... *
தவராஜகன்னிதனையெந்தவாறு தனினீமணந்ததுரையாய் ... (எ௰)

வேறு.

உரையாடியபரியாவையு நிசமாநரியுருவாய் ... ... ... *
புரையார்வனமெய்தும்வகை புரியும்மிறைநகரோய் ... ... *
கரையார்மனமுதலாகிய கரணங்கிசவடிவாய் ... ... ... *
விரையார்மலரடிமேவுறு விதநீசெயத்தகுமே. ... ... (எக)

தகுநின்னுருவியானென்பது தனைமீதொருவந்தி ... ... *
மகனென்றவள்வினைவாயிடை மண்போடுதல்போல்வந் ... *
திகன்மாறன்கையடியேற்குமன் றிறைமாநகருறைவோய் ... *
பகரும்முயிரொவையும்மது படநின்றிடுமுறையால். ... (எ௨)

முறைதப்பியசெழியன்சுர முதுகூனுடனகல ... ... *
மறைசெப்பியசிவஞானசம் பந்தமகவைப்போ ... ... ... *
லிறைநற்பதியுறைவோயென தியானென்னுளக்கூனே ... *
டறையுட்பகையாகுஞ்சுர மகல்வித்தெனையாள்வாய் ... (எ௩)

ஆள்வாரிலிமாடாயுழ லமணுள்கழுவுறவுந் ... ... ... *
தாள்வாரிசமுடிசூடிய சைவாள்வளர்வுறவுங் ... ... ... *
கோள்வாம்பரமதகோளரி யாலேபுரியுமையாள் ... ... *
கேள்வாவிறைநகரோயிகல் கிறிஸ்தான்கெடவருளே. ... (எச)

அருண்மிக்குறுபுகலிக்கிறை யவன்வைத்திடுகரியாந் ... ... *
தெருண்மிக்குறுசிவலிங்கமுங் கிணறுஞ்சமிச்செடியும் ... *
பொருண்மிக்குறுவணிகக்கொடி போல்வாள்பொருட்டழைத்து ... *
மருண்மக்குறுமிறைமாநகர் வாழ்வோனடிதாழ்வாம் ... (எரு)

ஆமன்றெனவுளதின்றென வருவோடுருவெனவே ... ... *
தாமொன்றியணிலைவிட்டறு சமயந்தடுமாறச் ... ... ... *
சேமந்திகழிறைமாபுரத் திருக்கோவிலுட்புகுந்தான் ... ... *
மாமென்கயல்விழிமாதொடு மறைமேலுறைசிவனே. ... (எசு)

சிவனேஜயஜயவானவர் தேவேஜயவுமையா ... ... *
டவனேஜயசிவசங்கர சம்போஜயவெனையாள் ... ... ... *
பவனேஜயபரமாபசு பதியேஜயவுயர்மா ... ... ... ... *
நவனேஜயவிறைமாபுரத் தலவாஜயமிகவே. ... ... ... (எஎ)

மிகமேவியவினையாவையும் வீடும்படிபெற்றே ... ... ...*
னகமேவியமாயைமல மையந்திரிபற்றேன் ... ... ...*
சுகமேயலதேதுங்குறை சொல்லவெனக்கில்லை ... ...*
மகராயபுரத்தேயுறை வள்ளலருளாலே... ... ... (எஅ)

ஆலந்தனையுண்டேயமிர் தண்டர்க்கருள்செய்தோன்... ... ...*
காலன்றனையட்டேசிறு பாலன்றனைக்காத்தோன்... ... ...*
ஞாலந்தருமஞ்சேல்விழி நங்கைமணவாளன் ... ... ...*
பாலந்திகழ்விழியானிறை பதியானெமைவிதியான்... ... ...(எகூ)

விதிதந்திடுபவமுங்கொடு வெங்கூற்றுதவழிவும் ... ... ...*
மதிவெண்குடைநிழல்வாழ்தரு மதவேடருமயனுங்... ... ...*
கதிதந்தருள்புரிவானிறை கடிமாநகருறைவா ... ... ...*
னதிசுந்தரனடிபேணுந ரடையார்பிறரடைவார் ... ... (அ௰)

வேறு.

அடைக்கலன்புலன்களைந்து மாணவாதிமும்மலந் ... ...*
துடைக்கலன்மெயன்புகொண்டு தொண்டுசெய்கிலேன்பவத் ...*
திடைக்கலங்குகண்கலக்க மெந்தவாறொழிந்துநின் ... ...*
னிடைக்கலந்துநிற்பனைய விறைபுரத்துளீசனே ... (அக)

ஈசனெந்தைமுக்கணப்ப னிறைபுரத்தனன்பருள் ... ...*
வாசனிந்துகங்கைதும்பை வைத்திலங்குசேகரன் ... ...*
பாசபந்தமற்றிறைஞ்சு பத்தரெய்ப்பில்வைப்புமை ... ... ...*
நேசனென்றுணர்ப்பதன்றி வேறுணர்ப்பெனெஞ்சமே ... (அஉ)

நெஞ்சம்வாக்குடம்புமூன்று நின்னதென்றுகொண்டடிக் ... ...*
கஞ்சமென்முடித்தலத்து வைத்துநின்கடைக்கணுற் ... ...*
சஞ்சிதம்பொடித்துமன்பு ரத்திலுற்றசம்புவே ... ... ...*
விஞ்சைதந்தெனைக்கலந்து நின்றதென்னவித்தகம் ... ...(அங)

வித்தமாவிதேகமுன்ன தென்றுகைவிடுத்தியான் ... ...*
றத்தமாவளித்தபின் பெனக்குமோர்சுதந்திர ... ... ...*
மித்தலத்திலேதுமன் பதிக்கணுற்றவீசநின் ... ... ...*
சித்தமெங்ஙனங்ஙனம் பொருந்துமாறுசெய்கவே ... (அச)

செய்யராயபுரமிலங்கு தேசிகேசநின்னலா ... ... ... ...*
லையனன்னைமக்களொக்கன் மற்றியாரெனக்குளார் ... ... ...*
பொய்யதானமாயைதன்னி னின்றலைந்தபுந்திதான் ... ... ...*
மெய்யதானநிர்விகற்ப நிட்டைமேவிநிற்குமோ ... ... (அரு)

நிற்குஞானதீபம்வந்து நெஞ்சகத்தவிஞ்சையா ... ...*
மற்குலத்தையீடழித்து மெய்ம்மையாயவப்பொரு ... ...*
ளெற்கிலங்குமாறுணர்த்த லென்றிராயமாநகர்ச் ... ... ...*
சொக்கலிங்கமங்கைபங்க சோமசுந்தரேசனே ... ... (அசா)

சுந்தரோசவங்கயற்கண் மங்கைபங்கதொண்டர்கு ... ... ...*
மூந்தரோசதேவருய்ய வாலகாலம்வைத்திடுங் ... ... ...*
கந்தரோசவேழைபங்க காலகாலருத்திர ... ... ...*
வெந்தரோசர்ராயமாபு ரோசவற்கிரங்கிடே ... ... (௮௭)

இரங்குமன்பரொங்குளார்க ளென்றுதேடிவந்துநல் ... ...*
வரங்கடந்துபோதவின்ப வாழ்வுநல்குவானெவ ... ...*
னுரங்கலந்தவன்பர்நீவி ருாமினென்னிலிந்துவைச் ... ...*
சிரங்கலந்திராயமா புரத்துணின்றசெம்மலே ... (௮௮)

செம்மலாயிராயமா புரத்துணின்றதேவனே ... ... ...*
மும்மலாதிபாசபந்த முத்திநல்குசித்தனே ... ... ...*
தும்மலாதிவந்தெனைத் தொடர்ந்துநின்றபோழ்தெலா ... . ...*
மம்மரோகுமாறுசுந்த ரோசவென்னவைத்திடே ... ...(௮௯)

வைத்தபெத்தசித்தமுற் றிருந்துநீமறைந்தனே ... ... ...*
கைத்தலத்தின்முத்தையொப்ப முத்தருட்கலந்தனே ... ...*
யெய்த்தவத்தலத்தருட்கண் வைத்தெனைப்புரந்தனே ... ...*
மெய்த்தமன்புரத்தநின் விநோதமென்னுரைப்பதே ... ...(௯௰)

வேறு.

உரைக்குமாநிகமாகமங்களி னுச்சிமேவியவும்பர்நாதனே ... ... ...*
விரைக்குமாமலர்ச்சோலைசூழ்தரும் வென்றிமன்புரத்தன்பர்மன்னனே ... *
குரைக்குநாயினுங்கடையனுகிய கொடியபாவியேன்வஞ்சநெஞ்சினைக் ... ...*
கரைக்குமாறுருகுஷிதந்தெனைப் பாதுகாத்தருள்கருணைவாரியே ... (௯௧)

மாரிவிண்வலைவானிவையக மன்னுபல்வகைச்சீவராசிகள் ... ... ...*
சூரியன்றிசைகாலமம்புலி துன்னுமைவகைப்பூதம்யாவையு ... ...*
மோரினின்னயலொன்றுமின்மைபி ளுெருவனுனுனக்கனியனுவனே ... ... *
சீரிலங்கியராயமாபுரச் செம்மலேயெனைத் தொண்டுகொண்டிடே... ...(௯௨)

கொண்டுநீறணிந்தைந்தெழுத்தினை யோதிநெஞ்சினிற்குற்றமின்றியே ... ...*
தொண்டுசெய்துசைவாகமத்தினிற் சொன்னவண்ணநன்னெறிநடந்துநின் ...*
முண்டகம்புனைபாதமெய்தியே யுட்களித்திடுமுத்தராகிய ... ... ...*
வண்டருந்தொழுநல்லினந்தனை யானடைந்திடவன்புதந்திடே ... (௯௩)

தந்தவோர்மொழிப்பொருளுணர்ந்தியான் றனியனுயுடலாதியாய்வரும் ... ...*
பந்தபாசமற்றின்பமாகிய பதியினிற்குடியாயிருந்துமே ... ... ...*
லந்தமாதியிற்றென்றுமோர்படித் தாயவீடடைந்துய்வதென்றுகாண் ... ...*
கந்தமாமலர்ப்பொய்கைசூழ்தரு மிறைபுரத்துறைகடவுளுதனே... ... (௯௪)

நாதனேயருட்கண்ணனேமலர்க் கையனேதிருநளினமாமலர்ப் ... ...*
பாதனேசெழும்பவளவாயனே பாவநாசனேபங்கயச்சதுர் ... ... *
வேதன்மால்பணிமன்புரத்துறை மீனலோசனமங்கைபங்கனே ... ...*
யாதனேனுனைத்தஞ்சமாவடைந் தெய்துமாருளார்கொலெய்துவார் ... (௯௫)

எய்துமுப்புரங்காமனைப்பொடித் தேமனின்னுயிருண்டயன்சிரங் ... ... *
கொய்தவன்மகன்மகமழித்தடல் கொண்டிராவணன்றோளெரித்திடும். ... *
மைதருங்கயற்கண்ணிபங்கனை மன்னமாபுரத்தெங்கண்மன்னனைக் ... *
கைதரும்பெருங்கருணையாளனைக் கண்டுகண்குளிர்ந்தன்பர்போற்றுவார் ... (௯௬)

போற்றிமாலவன்கண்ணிடந்துதன் பொன்னடிக்கணர்ச்சனைபுரிதலு ... *
மாற்றன்மிக்குறுமாழியீந்தொரு பாலகற்கமுதாழியீந்திடு ... ... *
மேற்றுவார்கொடியெந்தையங்கயற் கண்ணிதன்னொடுமிறைபுரத்துறை ... *
தோற்றருஞ்சுயஞ்சோதியாயொளிர் சுந்தரேசனைச்சிந்திநெஞ்சமே. ... (௯௭)

நெஞ்சமேதிருநீலகண்டனைப் பாண்டரங்கனைநினையுமன்பனா ... ... *
யஞ்சலென்னவாளுடையநாதனை யண்ணலைத்திரிசூலபாணியை ... ... *
வஞ்சமின்றியதேவதேவனை மன்புரத்துறுநங்கண்மன்னனைத் ... ... *
தஞ்சமாக்கொடுநீபுரிந்திடு முதவியாதெனச்சாற்றவல்லனே. ... (௯௮)

வல்லவாறுநின்சீர்கள்பாடவும் வாரிசத்திருவடிவணங்கவு ... ... *
மொல்லுமாறுளத்துன்னையுன்னவு மும்பரும்பெறுவின்பமெய்தவு ... *
நல்லஞானிகளோடுவாழவு மென்னபுண்ணியநான்புரிந்தனன் ... ... *
மலலன்மாவளமன்புரத்துறை வள்ளலாகியசுந்தரேசனே ... ... (௯௯)

ஈசனின்னருள்வாழிமன்புரத் திறைவநின்னருள்வாழியன்பருள் ... *
வாசநின்னருள்வாழிசேல்விழி பங்கநின்னருள்வாழியெம்பவ ... ... *
நாசநின்னருள்வாழிசற்குரு நாதனின்னருள்வாழிசிற்பிர ... ... *
காசநின்னருள்வாழிசுந்தரக் கடவுணின்னருள்வாழிமன்னவே. ... (௱)

பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

சிவமயம்.

# வேதசிரோணி

## சிவசிதம்பரதேசிகர்பேரில்சரணப்

## பதிகம்.

சத்துச்சித்தானந்தநித்தியபூரண தற்பரனேசரணம்... ... ...*
சர்வப்பிரபஞ்சத்தையாக்கியழித்திடுஞ் சங்கரனேசரணம் ... *
பத்தருளத்தில்விளங்குஞ்சகளப் படிவத்தனேசரணம் ... ...*
பரசிவயோகியருள்ளத்திலங்கும் பரஞ்சோதியேசரணம் ... *
முத்தருளத்தில்விளங்குஞ்சிவானந்த முன்னவனேசரணம் ... ...*
மோனசுகோதயமாகவிளங்கு முழுமுதலேசரணம் ... ... *
சித்தந்திரித்துச்சிவமாக்கவல்ல திருவருளேசரணம் ... ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ... (க)

ஆகமவேதபுராணகலைகளுக் கப்புறத்தாய்சரணம் ... ... *
அருள்வடிவாகவிளங்குறுநெஞ்சினர்க் கண்ணியனேசரணம் ... ...*
சோகப்பிறவிப்பிணிக்கோர்மருந்தாஞ் சுடர்க்கொழுந்தேசரணம்... *
சுத்தவவத்தையில்வந்துவிளங்குஞ் சுகசொருபாசரணம் ... ...*
ஏகப்பரப்பிர்ம்மமாகவிளங்கு மிறையவனேசரணம் ... ... *
என்றனிதயத்திலங்கும்பரானந்த வின்னமுதேசரணம் ... ...*
தேகவிலக்ஷணமாகவிளங்குறு சிற்சொருபாசரணம் ... ... *
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ... (உ)

சேவபரசெகமூன்றுநினைவிற் றெரிப்பவனேசரணம் ... ... *
சித்தநினைவினைத்தன்னில்விளங்கத் தெளிப்பவனேசரணம் ... ...*
மேவியதன்னைச்சுயஞ்சுடராக விளக்குறுவோய்சரணம் ... ... *
வேதாந்தவேத்தியனாகவிளங்குறும் வித்தகனேசரணம் ... ...*
பாவமபாவமிரண்டுமகன்ற பராபரனேசரணம் ... ... ... *
பாதஞ்சிரத்திற்பொறித்தெனையாளுடை பண்ணவனேசரணம் ...*
தேவருமூவரும்யாவருந்தேடுறு சிற்சுகனேசரணம் ... ... *
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... (௩)

பக்குவர்போதம்பதைப்பறநோக்குறும் பார்வையினாய்சரணம் ...*
பாசமகலச்சிரத்திற்பொறிக்கும் பதாம்புயனேசரணம் ... ... *
நெக்குநெக்குள்ளேயுருக்குஞ்சிரிப்புடை நின்மலனேசரணம் ...*
நீடொளிசந்திரன்போலுந்திருமுக நித்தியனேசரணம் ... ... *
முக்கனிகற்கண்டுசேர்க்கைபோலு மொழியுடையாய்சரணம் ... ...*
முத்திநிலையிதுவென்னவுணர்த்துசின் முத்திரையாய்சரணம் ... *
செக்கர்மணிச்சடையாயருளோங்குந் திருவுருவோய்சரணம்... ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ... (௪)

தத்துவக்காட்டைக்களைந்தறவெட்டித் தகர்த்தவனேசரணம் ... *
தன்னைவெளிப்படவைத்துவிளக்கும் தயாநிதியேசரணம் ... ...*
சித்துருவாகுஞ்சிவத்தோடிரண்டறச் சேர்ப்பவனேசரணம் ... *
தெள்ளமுதக்கடல்போலும்பரசுகந் தேக்குவிப்போய்சரணம் ... ...*
கத்துஞ்சமயவழக்கையறுத்தொளி காட்டுவிப்போய்சரணம் ... ...*
கடையவன்றன்னையுந்தன்மயமாக்குறுங் கண்ணுடையாய்சரணம் ...*
செத்துதியாதசிவானுபவந்தருஞ் சின்மயனேசரணம் ... ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... (ரு)

பாசம்பசுபதிமூன்றும்விளக்கருட் பார்வையினாய்சரணம் ... ...*
பாராமற்பார்க்குநிலையையளிக்கும் பசுபதியேசரணம் ... ...*
கோசப்புரஞ்செறுமும்மதவிஞ்ஞான குஞ்சரமேசரணம்... ... *
கோடிரவிப்பிரகாசத்திற் கொப்பாங்குணக்கடலேசரணம் ... ...*
நேசமடியரிடத்தினில்வைத்தரு ணின்மலனேசரணம் ... ... *
நினைப்புமறப்பறநிற்குநிலையி னிகழ்பவனேசரணம் ... ... ...*
தேசம்பரவுந்திருவளர்வேத சிரோணியுளாய்சரணம் ... ... *
தெய்வசிதம்பரதேசிகராஜ ராஜேந்திரனேசரணம் ... ... (சு)

பத்திக்கடலினுதித்துவிளங்கும் பரஞ்சுடரேசரணம்... ... ...*
பாவலர்க்கெய்ப்பினில்வைப்பெனவந்தருள் பாக்கியமேசரணம் ... *
புத்தியினின்றுவிளங்குஞ்சுகபரி பூரணனேசரணம் ... ...*
புண்ணியவான்களுக்கண்ணியனாகிய போதகனேசரணம் ... *
எத்தியெனைத்தடுத்தாளுடைநாயக னேயிறையேசரணம் ... ...*
எண்ணமுடித்துமுன்னின்றுபரசுக மீபவனேசரணம் ... ... *
சித்தியளிக்குமருள்வடிவாகிய சிற்சொருபாசரணம் ... ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ... (எ)

ஐவகைப்பூதங்கதிர்மதியாருயி ராயவனேசரணம் ... ... ...*
அண்டமும்பிண்டமுநின்றுவிளங்கு மழகுடையாய்சரணம் ... *
வைவகைசெய்திடுதுன்பமகற்றுறு நாயகனேசரணம்... ... ...*
நாதமுடிவினடித்துறுமானந்த நாடகனேசரணம் ... ... *
உய்வகைவேண்டுநர்க்கின்பமளித்திடு முத்தமனேசரணம் ... ...*
உள்ளதுமில்லதுமாகவிளங்கு மொருபொருளேசரணம் ... ... *
செய்வகையாவுஞ்சிவன்செயலென்னத் தெரிப்பவனேசரணம் ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ...(அ)

வேதமலையில்விளங்குமெய்ஞ்ஞான விளக்கொளியேசரணம் ...*
விண்ணவர்மண்ணவர்யாவருந்தேடும் விழுப்பொருளேசரணம் ... *
காதல்புரிந்திடுமன்பருண்மேவிய கண்மணியேசரணம் ... ...*
காமக்குரோதமுலோபமகற்றிடு காரணனேசரணம் ... ... *

மாதவருள்ளக்கமலத்திலங்குறு மாணிக்கமேசரணம் ... ...*
மத்தமிகுத்திடுமென்னையுமாட்கொள வல்லவனேசரணம் ... *
சீதமலர்ப்பொழில்சூழ்தருவேத சிரோணியுளாய்சரணம் ... ...*
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம்... ... (க)

கற்பனையாவுங்கரைத்தறிவாக்கிய காரணனேசரணம் ... ...*
காக்ஷிமுதற்பிரமாணங்களெட்டுங் கடந்தவனேசரணம் ... ... *
விற்பரத்க்குள்ளொளிக்குள்ளொளியாயொளிர் மெய்ப்பொருளேசரணம்
வேதப்பொருளைவிளக்குறுமெய்ஞ்ஞான விண்மணியேசரணம் ...*
தற்பதந்தொம்பதஞ்சாற்றுமசிபதந் தானனவாசரணம் ... ... *
சமரசமானநிலையில் விளங்குறுஞ் சைதன்யமேசரணம் ... ...*
சிற்பரஞானிகள்சூழ்தருவேத சிரோணியுளாய்சரணம் ... ... *
தெய்வசிதம்பரதேசிகராஜரா ஜேந்திரனேசரணம் ... ...(௰)

சரணப்பதிகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

வேதசிரேணி சிவசிதம்பரதேசிகர்பேரில்

# ஆனந்தக்களிப்பு.

---

ஆனந்தமானந்தந்தோழி - பர - மானந்த மானந்த மானந்தந்தோழி.

பத்தர்கள்பாலிஷ்டலிங்கம் - யோகப் - பண்டிதர்பாலுறு நற்பிராணலிங்கம்—முத்தர்கள்பாற்பாவலிங்கம் - ஆன - மூர்த்திசிதம்பர சற்குருலிங்கம்.—ஆனந்தம்.

ஞானவெளிவடிவாண்டி - நொண்டி - நாடகஞ்சபையில்வந் தாடிநின்றாண்டி—யானவனிஷ்டங்கொண்டேண்டி - யென்னை - யம்பலந்தன்னி லிழுத்துவிட்டாண்டி.—ஆனந்தம். ... ... ... ... ... (உ)

குன்றனையானையடுத்துப் - பெற்ற - கொள்ளையென்னே பிழையின்றியிழுத்து—மென்றிருச்செங்காலெடுத்து - தலை-மீதினிலெட்டி யுதைத்தானெழுத்து.ஆனந்தம்.

மூலையிருந்திடுங்கன்னி - தன்னை - முற்றத்திழுக்கத்தொட்டான்கரஞ்சென்னி—சாலவும்பாரித்தையுன்னி - யந்தத் - தப்பிலியைவிடவொண்ணாதுசின்னி.ஆனந்தம்.

பட்டப்பகலில்வந்தாண்டி - யெல்லாம் - பார்க்கின்றபோதுகண் சைகைசெய்தாண்டி — யிஷ்டமவன்மேற்கொண்டேண்டி - கொண்ட - வென்னையும்வெட்டவெளியில்விட்டாண்டி.—ஆனந்தம். ... ... ... ... (ந)

பூங்கைவிளங்கியநெல்லிப் - பழம் - போன்மதுரந்தருஞ் சொல்லினைச்சொல்லி—ஆங்கவன்ருனெனைப்புல்லி - வெளி - யாக்கியென்மானங் கெடுத்தானேவல்லி ஆனந்தம். ... ... ... ... ... ... (சு)

தாய்தங்கையேதுமில்லானே - யென்னைச் - சபையிலிழுத்துத் துகிலுரிந்தானே—யீதெங்குசொல்லுவனுனே - முற்று - மென்னபிமானமும் போச்சடிமானே. ஆனந்தம். ... ... ... ... ... ... (எ)

தப்பிலியென்பங்குற்ருனே - யவன் - றனையன்றி வேருென்றும் பார்க்கவொட்டானே—யிப்படியும்மயன்ருனே - தலை - யேட்டிலெழுதிடி லென்னசெய்வேனே. ஆனந்தம். ... ... ... ... ... (அ)

நல்லவனைக்கட்டிக்கொண்டேன் - அ - னுதியிலென்னநற்பலன்கண்டேன்—ருெல்லையாடலினைக்கண்டே - னன்றிச் - சுகமுறவேயெனை நான்வாரிக்கொண்டேன், ஆனந்தம். ... ... ... ... ... ... (க)

வெள்ளைவெளுத்திடும்வண்ணு - னடு - வீதியிலென்றனைக் கண்டருட்கண்ணன் மெள்ளனவேசைகைபண்ணு - னவன் - மேலிச்சைகொள்ளவிக் கோலமும்பண்ணுன், ஆனந்தம். ... ... ... ... ... (ய)

பரமேட்டிகைநீட்டித்தானே - யிந்தப் - பசுவின்கரியுளங் கையிற்றந்தானே—யுரமாகுமென்றுதின்றேனே - தின் - ருெருநாளைக்கொருநாளென் னுருக்குலைந்தேனே, ஆனந்தம். ... ... ... ... ... (யக)

பதிவிரதப்பெண்களுட்டு - அந்தப் - பரமுத்தன்வாய்வழங் காதசொற்கேட்டு—மிதமிலிச்சென்மத்தைப்போட்டு - விட் - டேகாமல்வைத்து மிருப்பாரோமீட்டும், ஆனந்தம். ... ... ... ... ... ... (யஉ)

ஞானகிர்பாகரமூர்த்தி - குரு - நாதன்சிதம்பர ஞுஞ்சத்யகீர்த்தி—மோனமுறவெனைத்தேற்றி - வாய் - மூடித்தலைவெட்டி ஞுனென்னநேத்தி, ஆனந்தம். (யங)

பரதேசகுருசக்ரவர்த்தி - யொரு - பண்டாரம்போலுருக் கொண்டெனைநத்தி—வரஞானநூலேணிபற்றி - யென்றன்-மாளிகைவந்துதந்தாஞெருமுத்தி, ஆனந்தம்.

சென்மசமுத்திரபங்கந் - தன்னிற்-சிக்கிநடவாத வென்மனவங்கந்—தன்னையருட்புகைவங்கங் - கட்டிச் - சற்கறையேற்றின னென்றுளாசிங்கம், ஆனந்தம். (யரு)

லவணப்ரதிமைகடலாடி -கீ-லாலமேயானதிற் குருவினைத்தேடி—யவனருளாற்சிவநாடி - யா - னதுவாயிருக்கும் புதுமையென்னேடி, ஆனந்தம்.... ... (யசு)

தண்முகந்தோன்றியபுண்ணை - யாற்றித் - தந்தானேமூடித் திறவாதகண்ணை—சண்மதஸ்தாபனம்பண்ணே - பரந் - தானன்றிவேறில்லை யென்றடிபெண்ணே, ஆனந்தம். ... ... ... ... ... ... (யஎ)

அறிவெனுங்கண்ணுக்குள்ளாலே - திரு - வருளெனும்படிக மணியுண்டதாலே—குறியறுசிவத்தைக்கண்டாலே -யென்ன - குறையுண்டுகூருய் நமக்குமப்பாலே, ஆனந்தம். ... ... ... ... ... ... (யஅ)

நச்சுமுடற்பொறிநாசம் - அஞ் - ஞானகரண வுயிர்களுங்காகம்—சச்சிதானந்த சிவோக - மென் - மூனந்தமான சதானந்தயோகம், ஆனந்தம் ... (௰௧)

சகமதைமெய்யென்றுதானே - நம்பிச் - சஞ்சலசித்தமுற் றயருறுவானேன்—சுகசொருபம்மதுநானே - யென்று - துணிந்தவர்க்குத்துக்க முள்ளதோமானே, ஆனந்தம். ... ... ... ... ... ... (௨௰)

கற்பமாயின்றுவருத்தி - மூச்சைக் - கட்டியுடலைநிறுத்தும்விருத்தி—புத்புதந்தன்னையிருத்திக் - கொள்ளப் - பூண்கட்டவெண்ணினாற் போலவொருத்தி, ஆனந்தம்.

எல்லாஞ்சிவமாதலாலே - பூசை - யென்கொடுசெய்வது செய்திடிற்கோல—வெல்லப்பிள்ளையார்க்குச் சால - நை - வேத்தியமதைக்கிள்ளி வைப்பதுபோல, ஆனந்தம். ... ... ... ... ... ... ... ... (௨௨)

தானத்தின்மேலன்னதானம் - அது - தன்னிலுமேனிலை நிற்குநிதானம்—ஆனத்தின்மேற்சமாதானம் - எய்தி - யானந்தவைபோக மாமுத்திஸ்நானம், ஆனந்தம்.

சொல்லுவர்கோடிபேர்ஞானம் - வாய்ச் - சொல்லுக்குப்பஞ்சமோ நிற்குநிதானம் — தர்ல்லபங்கற்பொன்சமானம் - ஆகத் - தோற்றுந்தராசிமுட் போற்சாதிமோனம், ஆனந்தம்... ... ... ... ... ... (௨௪)

மூத்தனையொன்றுஞ்சொல்லாதே - சின் - மூத்திரைநோக்கத்தை விட்டுவிடாதே—குத்திரதேகநில்லாதே - மண் - குதிரையைநம்பி நதியிறங்காதே, ஆனந்தம்.

கொண்டவன்வீடேகும்பெண்போல் - அன்னை - குக்ஷியைவிட்டு வருமுடன்மண்பால்—பண்டனைவீடேகும்பெண்போல் - திரு - பண்ணிக்கொண்டேகுஞ் சுடலைக்குநண்பால், ஆனந்தம். ... ... ... ... ... (௨௬)

திண்டப்பொருள்மலந்தன்னை - யது - சேர்ந்திருக்குங்கட மாமுடறன்னைப்—பூண்டிச்சைகொள்வதிங்கென்னே - தாயைப் - போற்றிமகன்றனைக் கைவிடலென்னே, ஆனந்தம். ... ... ... ... ... (௨௭)

தணப்பிலுடலினைநானே - யென்று - தான்சொல்லியேவினைக் கேடாதமுனே—சணப்பன்மனைக்கோழிதானே - காலில் - தளையிட்டுக்கொள்ளுதல் போலடிமானே, ஆனந்தம். ... ... ... ... ... (௨௮)

வாயாரச்சுற்றத்தார்கூடி - யிங்கு - வாவென்றழைப்பினும் வாய்தனைமூடிப்—பேயாடுந்தாய்வீடுதேடிப் - பிணம் - பேசாமற்போகும் பெருமையென்னேடி, ஆனந்தம். ... ... ... ... ... ... ... (௨௯)

கொள்ளையாய்ஞானப்பொன்றன்னை - குரு - கூறினுமண்ணவர் கொள்ளாததென்னே—அள்ளும்விதியிலர்க்கென்னே - யள - காபுரிகொள்ளையிட் டாலுஞ்சொன்மின்னே, ஆனந்தம். ... ... ... ... ... ... (௩௰)

செத்திடில்வாணியர் கோடி-யெண்ணெய்-திருடியபூனையும் பரணைமேலோடி—நித்திரைபோமிதுகோடி - யாயி - னீள்சுடலைநரி யூழைனுமேடி, ஆனந்தம். (௩௧)

திருவளர்வேதசிரோணி - வாழுஞ் - சிதம்பரதேசிகன்றிருவடிபேணி—குருவளர் ஞானகல்யாணி - தன்னைக் - கூடிச்சுகித்துக்கொள் வாய்மோக்ஷகாணி, ஆனந்தமானந்தந்தோழி. ... ... ... ... ... ... (௩௨)

ஆனந்தக்களிப்பு முற்றிற்று.

